# உயிரை மறந்த உடல்கள்

சுப. இரத்தினகிரி

தமிழாக்கம் - **மின்னூல் வெளியீடு :**

***FreeTamilEbooks.com***



பதிவிறக்கம் செய்ய -

http://FreeTamilEbooks.com/ebooks/uyirai_marantha_udalgal

மின்னூலாக்கம் - சுமதி - sumathig000@gmail.com

This Book was produced using LaTeX + Pandoc

# பொருளடக்கம்

# 1. பாகம் - 1

*In the Srimad Bhagavatam Lord Krishna describes the Eight Siddhis as:*

{- Mahima: expanding one's body to an infinitely large size;
- Aṇimā: reducing one's body even to the size of an atom; - Laghima: becoming lighter than the lightest; - Prapti: having unrestricted access to all places; - Prākāmya: realising whatever one desires; - Iśitā: controlling the subpotencies of maya; - Vasita: the power to bring others under control; - Kāmāvasāyitā: obtaining any desired result, to the highest possible limit. }

எப்போதும் பரபரப்பான சென்னை. மணி அதிகாலை 3.00. பூக்கடை காவல் நிலையம். அப்போதும் தூங்காமல் பணியாற்றிக் கொண்டிருந்த காவல் அதிகாரிகள். கடைகளில் சாமான்களை இறக்கவும், ஏற்றவும் வந்திருந்த லாரிகள், அவற்றின் இரைச்சல்கள், கூலிகளின் சத்தங்கள் என அந்த அதிகாலை நேரத்திலும் சுறுசுறுப்பாகவே இருந்தது சென்னை.

அந்த சத்தத்தையும் மீறி இன்னொரு சத்தமும் கேட்டுக் கொண்டிருந்தது. அது தான் பறையடிக்கும் சத்தம். யாரோ ஒரு கிழவி. வயது 75 இருக்கும். அமாவசை இரவில் வெகு நேரம் கழித்தும் அசைவே இல்லாமல் இருந்ததை யாரோ பார்த்து விட்டனர். பக்கத்தில் இருந்து வந்த மருத்துவர் அசையாத கிழவி 8 மணிக்கெல்லாம் இறந்து விட்டாள் என்று உறுதிப் படுத்திச் சென்றிருந்தார். அவள் இறந்ததில் வந்த குஷியோ அல்லது உண்மையிலேயே வருத்தத்தை மறக்கத் தான் குடிப்பார்களோ? பெரும்பாலானோர் குடித்திருந்தனர். நடை மேடை வாழ்க்கை தான் போலும் அனைவருக்கும்.

ஒப்பாரி, பறை, ரேடியோ சத்தம் என்று களை கட்டிக் கொண்டிருந்தது அந்த இடம். அவளை ஒரு நாற்காலியில் இருத்தி தலையையும் இரு கால்களையும் நாற்காலியுடன் கட்டி அமர வைத்திருந்தனர். இறந்த பின் ஒரு உடலை என்னென்னெ துன்பப்படச் செய்ய வேண்டுமோ அனைத்தும் செய்கிறார்களே! பாவம் உயிரோடு இருந்திருந்தால்?

அதிகாலை 4 மணிக்கு அப்போது தான் வந்திருந்த செய்தித்தாளை வைத்துக் கொண்டு சுடச் சுடச் செய்திகளைப் பற்றி விமரிசித்துக் கொண்டிருந்தார் தலைமைக் காவலர் ராம். ஐ.பி.எஸ். அதிகாரி. மிடுக்கான தோற்றம். கூர்மையான பார்வை. எவரையும் நொடியில் அலசும் திறன். உடனடி முடிவெடுக்கும் சாதுரியம். இவர் தான் ராம். யாரோ இரு லாரி டிரைவர்கள் சண்டை போட, அது பெரிய நெரிசலை உருவாக்க சத்தம் காவல் நிலையம் உள்ளே வரை வர விறுவிறுவென்று வெளியே வந்தார் ராம். அவர் வந்த வேகத்தையும், கண்களில் கோபத்தையும் பார்த்த இரண்டு டிரைவர்களுமே அலறியடித்துக் கொண்டு ஓட, நெரிசல் கொஞ்சம் கொஞ்சமாக சரியாக ஆரம்பித்து இருந்தது.

அப்போது தான் தற்செயலாக கிழவியைப் பார்த்தார் ராம். இரவு 8 மணி முதல் அதிகாலை 4.30 மணி வரை சவமாக இருந்த கிழவி, மருத்துவர் இறந்து விட்டாள் என்று உறுதி செய்த கிழவி, எங்கிருந்தோ ஆவேசம் வந்தவள் போல் நாற்காலியை விட்டு எழுந்து, கட்டுகளை அறுத்தெறிந்து விட்டு கண்களில் வெறியோடு ஓட ஆரம்பித்தாள். எதற்கும் அஞ்சா ராமே ஒரு நிமிடம் மிரண்டு விட்டார் என்றால் மற்றவர்கள் எம்மாத்திரம்?

பிடியுங்க பிடியுங்க, பேய் பேய் என்று அனைவரும் பயந்து அலற, அவர் கண் முன்னேயே சாலையைக் கடந்த ஒரு வடநாட்டவர் மேல் மோதிய கிழவி, அவர் கழுத்தை நெறித்து ஒரு கையால் அவரைத் தூக்கி பாதையைப் பிரிக்கும் வகையில் நடுவில் வைத்திருக்கும் கம்பிகளின் மேல் அவரைப் போட்டு கொன்றே விட்டாள்.

இவ்வளவு மிகக் கோரமான ஒரு கொலையை ராம் பார்த்ததே இல்லை. அதுவும் நேரில். கொன்ற மறுவிநாடி கிழவி அந்த இடத்திலேயே மீண்டும் செத்து விழுந்தாள்.

# 2. பாகம் - 2

*Ten Secondary Siddhis*

*In the Srimad Bhagavatam Lord Krishna describes the Ten Secondary Siddhis as:*

- *Being undisturbed by hunger, thirst, and other bodily disturbances*
- *Hearing things far away*
- *Seeing things far away*
- *Moving the body at the speed of thought*
- *Assuming any form one desires*
- *Entering the bodies of others*
- *Dying when one desires*
- *Witnessing and participating in the pastimes of the Apsaras*
- *Completely executing one's determination*
- *Being unimpeded by the modes of nature (gunas).*

ராமேஸ்வரம் செல்லும் வழியில் இருக்கும் அக்காமடம். ரயில்கள் மட்டுமே ராமேஸ்வரம் செல்லும் காலத்திலேயே புகழ் பெற்ற ஒரு ஊர். சிறிய ரயில் நிலையமானாலும் அருகிலேயே மண்டபத்திலிருந்து பாம்பன் பாலம் இருப்பதால் அங்கேயே சிறுவர்கள் முதல் பெரியவர்கள் வரை எதிர்பார்ப்பு ஆரம்பமாகி விடும்.

அங்கு கொஞ்சம் விவசாய நிலங்களும் இருந்தன. பெரும்பாலும் மானாவரிப் பயிர் செய்யும் விவசாய நிலங்கள் தாம். ராமநாதபுரம் மாவட்டம் முழுதுமே அவ்வாறு தானே. இதில் அக்காமடம் மட்டும் விதிவிலக்கா என்ன?

கடுங்கோபத்துடன் வீட்டிற்குள் உலாத்திக் கொண்டிருந்தார் பரமசிவம். அவருக்குக் கோபம் மட்டும் வந்ததென்றால் வீடே இரண்டு படும். நாற்பது வயதில் நாய்க்குணம் என்பார்களே அதை நிரூபிப்பதற்காகவே அவருக்குக் கோபம் வருமோ என்னவோ? சின்னப்பய என்ன தைரியம் இருந்தா எங்கிட்டயே அப்படிச் சொல்லுவான். எங்க போயிருவான்னு நானும் பாக்குறேன். எலே எங்க போனாலும் கடசில எங்கிட்ட தான்லே வந்தாகணும். நாக்கு மேல பல்லப் போட்டா

பேசுற. உனக்கு வைக்கிறேம்ல வேட்டு என்று கருவிக் கொண்டார். மனைவி குடிப்பதற்காகக் கொண்டு வந்த தண்ணீரைக் கூட தட்டி விட்ட படி வெளியே சென்று விட்டார்.

அவர் இந்தப் பக்கமாய் வெளியே சென்றிருப்பார். அந்தப் பக்கத்திலிருந்து ஆள் வந்திருந்தது. குய்யோ முறையோ என்று அழுது தீர்த்து விட்டாள் பரமசிவத்தின் மனைவி. ஆம் அவளது அண்ணன் நோய்வாய்ப்பட்டு இருந்தார். மருத்துவமனையில் இறந்து விட்டதாய் வந்தது சேதி. கணவர் எங்கே சென்றார் என்று கூடத் தெரியாமல், வந்த அவளது தம்பியிடமே உங்க மச்சான் இங்கிட்டு தான் போனாக, நான் முன்னால போறேன், சீக்கிரம் வந்து சேரு அவரோட என்ற படி வீட்டைப் பூட்டி விட்டுக் கிளம்பிவிட்டாள்.

பரமசிவத்தின் காதுகளுக்குச் செய்தி சென்றது. ஆமா, மச்சினன் போய்ட்டானாக்கும். எப்பவோ போக வேண்டியவன். என் நேரத்துக்குனே இன்னைக்குப் பாத்து போய்ச் சேர்ந்திருக்கான் பாரு தறுதல என்ற படி மாமனார் வீட்டுக்குக் கிளம்பிச் சென்றார் பரமசிவம்.

இவர்கள் சென்று சேரவும், மருத்துவமனையிலிருந்து பரமசிவத்தின் மச்சினன் உடல் வந்து சேரவும் சரியாக இருந்ததால் கூச்சலும் கூப்பாடும் அப்போது தான் அதிகரித்திருந்தது. இவர் வய்து தான் இருக்கும் இவர் மச்சினனுக்கும். இருவரும் டா போட்டு தான் பேசிக் கொள்வார்கள். அவர் போய்ச் சேர்ந்ததில் பரமசிவத்துக்கும் கொஞ்சம் உள்ளூற வருத்தம் தான்.

யாரோ ஒரு பெருசு சொல்லியது, ஆசுபத்திரி பொணத்த ரொம்ப நேரம் வச்சிருக்கக் கூடாதுலே, சீக்கிரம் போங்கலே மயானக் கரைக்கு என்றது. சரி என்று கிளம்பியது சவ ஊர்வலம்.

மயானக் கரையையும் அடைந்தது. பாடையை விட்டு உடலை இறக்கியது தான் தாமதம். பரமசிவத்தின் மைத்துனன் கண் திறந்தான். எங்கிருந்து தான் நோய்வாய்ப்பட்ட அவன் உடலில் பலம் வந்ததோ, பரம்சிவத்தின் மேல் ஏறி அமர்ந்து கொண்டான். வெட்டியான் முதல் அனைவரும் தறி கெட்டு ஓடத் துவங்கினர். பரமசிவத்திற்கு தன்னையே நம்ப முடியவில்லை. ஏண்டா எப்படியும்

எங்கிட்ட தான் வந்தாகணும்னா சொல்ற. இப்போ நீ தாண்டா எங்கிட்ட வந்திருக்க என்று வித்தியாசமாகப் பேசிய பரமசிவத்தின் மைத்துனன் பக்கத்திலிருந்த ஒரு பெரிய கல்லை எளிதாகத் தூக்கி பரமசிவத்தின் முகம் கூடத் தெரியாத வண்ணம் சிதைத்து அவரைக் கொன்றான். தானும் உடனே இறந்தான்.

## 3. பாகம் - 3

*In the Srimad Bhagavatam the Five Siddhis of Yoga and Meditation are described as:*

- *Knowing the past, present and future;*
- *Tolerance of heat, cold and other dualities;*
- *Knowing the minds of others;*
- *Checking the influence of fire, sun, water, poison, and so on;*
- *Remaining unconquered by others.*

சென்னை செண்ட்ரல் ரயில் நிலையத்தின் எதிரே அமைந்திருக்கும் ராஜாஜி அரசு பொது மருத்துவமனை. மருத்துவமனைக்குள் நுழைந்தாலும் மருத்துவமனை போன்றல்லாது ஏதோ ஐந்து நட்சத்திர விடுதிக்குள் சென்றது போல் தோற்றம். மருத்துவமனைக்கு வருபவர்கள் என்னவோ சாதாரண பொது மக்கள் தான். மருத்துவமனை ஏதோ திருவிழாக் கூட்டம் கண்டது போல் நோயாளிகளாலும், அவர்களைக் காண வந்த பார்வையாளர்களாலும், மருத்துவர்களாலும், மருத்துவம் பயிலும் மாணவ மாணவிகளாலும், செவிலியர்களாலும், மருத்துவமனை ஊழியர்களாலும் நிறைந்திருந்தது. மருத்துவமனை வாசமும் அங்காங்கே தெரிந்தது. மாலை 7 மணிக்கு மேல் பார்வையாளர்கள் அனுமதிப்பதில்லையாதலால் ஊழியர்கள் பார்வையாளர்களை விரட்ட ஆரம்பித்திருந்தனர்.

இது அனைத்தையும் கண்டுகொள்ளாமல் அங்கே தூணில் சாய்ந்து ஏதோ யோசனையுடன் நின்று கொண்டிருந்தான் ஸ்ரீதர். மருத்துவக் கல்லூரி மாணவன். இன்னும் ஒரு ஆண்டில் மருத்துவராக மாறி தொழில் செய்யும் கனவு கொண்டவன். அவனுக்குக் கொடுக்கப்பட்ட வெளி நோயாளிகள் பார்வை நேரம் முடிவடைந்ததால் கொஞ்சம் களைப்புற்று தற்போது தான் அவனது நாற்காலியில் இருந்து எழுந்து கொஞ்சம் ஓய்வெடுக்கும் வகையில் நின்று கொண்டிருந்தான். வழக்கமாய் அவனது நண்பன் ராஜேஷுடன் தான் செல்வது வழக்கம். இருவரும் மதுரைக்காரர்கள். ஒரே வீடு வாடகைக்கு எடுத்து சென்னையில் படித்துக் கொண்டிருந்தனர். ராஜேஷ் பணக்கார வீட்டுப் பிள்ளை. ஸ்ரீதர் தாய் தந்தையர் அரசு ஊழியர்கள். ராஜேஷின் மோட்டார் பைக்கில் தான் இருவரும் செல்வது வழக்கம்.

ராஜேஷ் போஸ்ட்மார்ட்டம் பகுதியில் அன்று வேலை பார்த்தான். கால்மணி நேரம் வரை காத்திருந்த ஸ்ரீதர் ராஜேஷைத் தேடி அவனது அறைக்கே செல்ல ஆரம்பித்தான். போஸ்ட்மார்ட்டம் செய்யும் பகுதி ஒரு ஓரத்தில் அமைந்திருந்தது. அங்கே செல்வதற்கே அவனுக்கு பத்து நிமிடங்களுக்கு மேல் ஆனது. போஸ்ட்மார்ட்டம் பகுதிக்கு உள்ளே செல்லும் கதவைத் திறந்ததும் எதிரே ராஜேஷ் வருவதைப் பார்த்தான்.

புன்முறுவலுடன், என்னடா இவ்ளோ நேரம்? வடபழனி வரை போகணும் தெரியும்ல. இந்த சிட்டியில படிக்கிறதுல இது தாண்டா கஷ்டம். போக வரவே 2 மணி நேரம் வேஸ்டாகுது. ஏதோ நமக்கு பைக் இருக்குறதுனால இவ்வளவாவது நேரமாகுது. பஸ்ல போனோம்னா அவ்வளவு தான். சரி வா கிளம்புவோம் என்றான்.

ஒரே நிமிசம் பொறுடா, இங்கே உட்கார்ந்திரு. மார்ச்சுவரிக்குள்ள போய் ஒரு கையெழுத்து மட்டும் போட்டு வந்துடறேன். இன்னைக்கு மட்டும் 15க்கும் மேல போஸ்ட்மார்ட்டம் பண்ணியாச்சு என்ற படி கிளம்பினான். ஸ்ரீதர் பொறுக்க முடியாதவனாக, நானும் வர்றேண்டா, அங்கேயிருந்தாப்புல கிளம்பிடலாம்ல என்றபடி கூடவே வந்தான்.

உள்ளே நுழைந்ததும் சிப்பந்தி இவனைப் பார்த்து வணக்கம் சொன்னான். என்ன டாக்குமெண்ட்ஸ் எல்லாம் ரெடி பண்ணிட்டிங்களா என்ற வண்ணம் அவனிடம் இருந்து ரிப்போர்டை கையில் வாங்கினான் ராஜேஷ். சார் இதோ இப்போ ஒரு கேஸ் வந்தது சார். அதை வெளியில வச்சிருக்கேன். உள்ளே வச்சிட்டு எடுத்துத் தர்றேன் சார் என்ற படி வெளியேறினான் சிப்பந்தி. திரும்பி ஒரே நிமிடத்தில் திரும்பி வந்தவன் ஒரு ஸ்டெரெச்சரில் ஒரு இளம்பெண்ணின் உடலைத் துணியால் மூடி இழுத்து வந்தான். ஆக்சிடெண்ட் கேஸ் போல சார். ஸ்பாட் அவுட்டு என்ற படி தள்ளிச் செல்ல எத்தனிக்கும் போது தான் அந்தப் பெண்ணுக்கு உயிர் வந்தது! தலையில் ரத்தத்துடனும், அலங்கோல முகத்துடனும் விடுக்கென எழுந்தவளைப் பார்த்ததும் அங்கேயே மூர்ச்சையானான் சிப்பந்தி.

வேகமாக ஸ்ரீதர் அருகில் வந்தவள் அவன் கழுத்தில் போட்டிருந்த ஸ்டெதாஸ்கோப்பைக் கொண்டே அவன் கழுத்தை நெறித்தாள். தடுக்கச் சென்ற ராஜேஷுக்கு விழுந்தது ஒரு பேயறை. அதிலேயே அவன் மயங்கிப் போனான்.

சிறிது நேரத்தில் ஸ்ரீதர் திறந்த கண்களுடன் அடங்கிப் போனான். அந்தப் பெண்ணும் தான்.

# 4. பாகம் - 4

*Occasionally, esoteric Western sources also refer to paranormal powers obtainable through spritual development. In his book Roza Mira,[1] or The Rose of the World, Russian mystic and visionary Daniil Andreev gives this list of paranormal abilities available to human beings through the astral body:*

- *communication with angels, daemons, and elementals;*
- *spiritual sight;*
- *spiritual hearing;*
- *"spiritual smell;"*
- *"deep memory;"*
- *levitation;*
- *perception of cosmic perspectives and panoramas.*

சென்னை. காலை மணி 9. காவல் துறை ஆணையாளர் அலுவலகம். காலையிலேயே பரபரப்புக்குப் பஞ்சமின்றி இயங்கிக் கொண்டிருந்தது. எந்தப் பரபரப்பும் இல்லாத ஒரு இடம் அந்த பெரிய அலுவலகத்திலேயே உண்டென்றால் அது ஆணையாளரின் அறை மட்டுமே. உள்ளே குளிரூட்டியின் கொர் சத்தத்தைத் தவிர வேறு சத்தம் எதுவும் இல்லை. பரந்த சென்னை மாநகரத்தின் ஒட்டு மொத்த சட்ட ஒழுங்கு பிரச்னை இங்கா கையாளப்படுகிறது என்று கேட்டால் வியப்பே மேலிடும்.

சூரியப்பிரகாசம். சென்னை காவல் துறை ஆணையர். பார்த்தால் ஐம்பது வயது ஆகி விட்டதென்றே சொல்ல முடியாத கம்பீரமான இளமை ததும்பும் உடல்கட்டு. ஆடை எப்போது பார்த்தாலும் புதிதாகத் தான் இருக்குமோ என்று ஐயமேற்படுத்தும் அளவுக்கு சுத்தம் மற்றும் விறைப்பு. எளிமையின் உருவம். கண்டிப்பின் சிகரம். நிதானத்தில் சக்கரவர்த்தி. ஆனால் அவரது நிதானத்தையே சிறிது ஆட்டம் காண வைத்திருந்தது தற்போதைய சூழ்நிலை.

எப்பேர்ப்பட்ட வழக்குகள், கொலைக்குற்றம், கொள்ளைக் குற்றம்,

தீவிரவாதிகள் பிரச்னை, சாதிச் சண்டைகள், மதக் கலவரங்களைப் பார்த்தவர் சூரியப் பிரகாசம். அத்தனை பிரச்னைகளையும் கத்தியின்றி ரத்தமின்றி சுமூகமாகத் தீர்க்கும் அறிவாற்றலும் பொறுமையும் படைத்தவர். ஆனால் இந்த வழக்கைப் பொருத்தவரை இது தனக்கு விடுக்கப்பட்ட சவாலோ என்று கூட எண்ண இயலாது கவலை ரேகை அவர் முகத்தில் ஓடிக் கொண்டிருந்ததால் அந்த அறையும் அமைதியாய் இருந்தது.

காலை பத்து மணிக்கு ஒரு கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதற்குண்டான ஆயத்தங்களில் இருந்தார் ஆணையர். காலை உணவு கூட அருந்தவில்லை இன்னும்.

சரியாக காலை பத்து மணிக்கு ஆணையர் அலுவலக வளாகத்திலேயே இருந்த கூட்ட அரங்கிற்குள் நுழைந்தார். அங்கே அவருக்கு முன்னமே பல உயர் காவல்துறை அதிகாரிகள் தங்கள் சீருடைகளில் வந்து அமர்ந்திருந்தனர். தமக்குள் குசலம் விசாரித்துக் கொண்டிருந்தனர். அவரவர் ஏரியாக்களின் தாதாக்களைப் பற்றி பேசிக் கொண்டிருந்திருப்பார்களோ? ஆணையர் நுழைந்த மறுவிநாடி அங்கே அவரது விறைப்புத் தன்மை அனைவரையும் தொற்றிக் கொண்டது. அமர்ந்ததும் அவர் பேசிய முதல் வாக்கியம், “ராம் எங்கே?” என்று தான். “இதோ சார்” என்று பத்து பதினைந்து இருக்கைகள் தள்ளி அமர்ந்திருந்த ராம் இருக்கையிலிருந்து சடாரென எழுந்தார். அதில் மரியாதையும் கம்பீரமும் ஒருங்கே இருந்தது. என் அருகில் இருக்கும் இந்த சீட்டில் உட்காருங்கள் என்றார் ஆணையர். ராம் உடனே பவ்யமாக அவர் அருகில் வந்து அமர்ந்தார்.

மீட்டிங் ஆரம்பிக்கலாமா என்று தொண்டையைக் கனைத்துக் கொண்ட சூரியப்பிரகாசம், “நாம் எதற்காக இங்கே கூடியிருக்கிறோம் என்று உங்களுக்குத் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன். தற்போது சென்னை மாநகரையே ஏன் மொத்த தமிழ்நாட்டையே உலுக்கிக் கொண்டிருக்கும் பிணம் செய்யும் கொலைகள் பற்றி முடிவெடுக்க வேண்டி இருக்கிறது. முதலமைச்சர் வரை கேள்வி கேட்டு என்னைத் திணறடிக்காத ஆட்களே இல்லை எனலாம். இது நம் ஒட்டு மொத்த காவல் துறைக்கு விடுக்கப்பட்ட சவாலாக இருக்கும் என்று நினைக்கிறேன். இது வரை மொத்தம் பதினெட்டுக் கொலைகள். அதில் ஒன்று மட்டும் ராமேஸ்வரம்

*அருகில். மற்ற அனைத்துமே சென்னையில் வைத்துத் தான். அதிலும் 15 கொலைகள் சென்னை பூக்கடை காவல் நிலைய எல்லைக்குட்பட்ட பகுதிகளில் தான். ராம், நீங்க இந்த வழக்கைப் பொறுத்த வரையில் என்ன சொல்ல விரும்புறீங்க? எந்த அளவுக்கு முன்னேறி இருக்கீங்க? உங்களால் கொலையாளியைப் பிடிக்க முடியுமா? வேறேதும் உதவி தேவையா? எவ்வளவு கால அவகாசம் தேவை? எனக்கு 24 மணி நேரக் கெடு கொடுத்திருக்கார் முதல்வர். ரொம்ப நாளைக்கு இந்தக் கேஸை அண்டர் த கவர்ல வச்சிருக்க முடியாது. பத்திரிகைக்காரங்க துடிச்சிக்கிட்டு இருக்காங்க. அவங்க வாயை அடைத்து விஷயத்தை லீக் ஆகாம ரொம்ப நாள் வைத்திருக்க முடியாது. அதற்குள் நாம சீக்கிரம் கண்டுபிடிச்சாகணும். சொல்லுங்க ராம்" என்றார் ஆணையர்.*

*கம்பீரமாக எழுந்து அனைவருக்கும் தன் பாணியில் வணக்கம் சொன்ன ராம், கொஞ்சம் கொஞ்சமாக இந்த வழக்கு சம்பந்தமாகத் தான் கண்டறிந்த விஷயங்களை வெளியிட ஆரம்பித்தார். அவர் பேசி முடிக்கும் போது ஆணையர் நெற்றியில் வியர்வை துளிர் விட்டிருந்தது. காலக் கெடு வைத்தெல்லாம் இந்த வழக்கை முடித்து விட முடியாது என்பதை அறிந்ததாலா? அல்லது இது முடிக்கவே முடியாத வழக்கு என்று தெரிந்து போனதாலா அல்லது தனது வேலைக்கே உலை வைக்கும் வழக்காக ஆகிவிடும் என்பதாலா அல்லது அவர் உயிரைப் பறிக்கும் அளவுக்கு இது விசித்திரமான வழக்கு என்பதாலா?*

# 5. பாகம் - 5

*In the Vibhuti Pada of the Yoga Sutras many different Vibhutis (powers) are mentioned. The following Vibhutis are mentioned in the Yoga Sutras in the following order:*

- *Knowledge of the past and future*
- *Understanding the sounds (language) of all beings*
- *Knowledge of previous existences*
- *Knowing the minds of others*
- *Invisibility*
- *Suspending the ability of the body to be heard, touched, tasted, or smelled*
- *Foreknowledge of the time of death*
- *Strength of any attitude (such as friendliness)*
- *Super-Strength (such as the strength of an elephant)*
- *Knowledge of subtle, hidden, remote things*
- *Knowledge of worlds, realms, universes, etc…*
- *Knowledge of the arrangement of stars, planets, etc…*
- *Knowledge of the movement of stars, planets, etc…*
- *Knowledge of the arrangement of systems in the body*
- *Freedom from hunger and thrist*
- *Attainment of Steadiness or Immobility*
- *Visions of Siddhas (perfected beings)*
- *Knowledge of anything and everything*
- *Knowledge of the mind*
- *Knowledge of pure consciousness (purusha)*
- *Psychic hearing, touch, vision, taste, and smell*
- *Entering and controlling the bodies of others*
- *Ability to float or walk on water, swamps, thorns, and other such objects*
- *Ability to glow or radiate light around the body*
- *Super-hearing (hearing at vast distances)*

- *Flight, ability to fly*
- *Mastery over the elements (earth, water, fire, air, space)*
- *Making the body atomically small, indestructible, perfect*
- *Perfection of the body in beauty, strength, grace, and brilliance*
- *Mastery over the senses*
- *Quickness of the mind, perception with the senses*
- *Supremacy over all states of existence, omnipotence*
- *Higher knowledge*
- *Discriminating knowledge*
- *Absolute Freedom (kaivalyam)*

சந்திரன். பெயருக்கேற்றவன். அழகானவன். இளைஞன். பணக்காரனும் இல்லை. ஏழையும் இல்லை. நடுத்தர வர்க்கத்தைச் சார்ந்தவன். தந்தையின் தொழிலான ஒரு எலெக்ட்ரிக் கடையை நிர்வகித்து வந்தான். தாய் யசோதை மட்டும் இருக்கிறார். தந்தை இறந்து ஐந்து வருடங்களுக்கும் மேலாகி விட்டிருந்தது. வீட்டிலிருந்து கடைக்கு 15 நிமிட நடை பயணம் தான். சென்னையின் சந்தடி மிகுந்த பகுதியான பாரீஸ் கார்னர் அருகே அமைந்திருந்தது அவர்கள் வீடும் கடையும், பள்ளிப் படிப்பைப் பாதியிலேயே விட்டு விட்டு கடையைக் கவனித்து வருகிறான் சந்திரன். காலையிலிருந்து மாலை வரை தினந்தோறும் ஒரே விதமான வேலை தான். காலை கடையைத் திறந்து வைக்க வேண்டியது. மதியம் கடையை அடைத்து விட்டு வீட்டுக்கு சாப்பிட வர வேண்டியது. மீண்டும் அரை மணி நேரத்தில் சாப்பிட்டு விட்டு கடையைத் திறக்க வேண்டியது. இரவு 8 மணிக்கெல்லாம் கடையை மீண்டும் அடைத்து விட்டு வீட்டுக்கு வந்து விட வேண்டியது. இவனுக்குத் துணையாக ஒரே ஒரு கடைப் பையன் மட்டுமே. ஞாயிற்றுக்கிழமை மட்டும் ஓய்வு. கடையிலும் இவனுக்கு அதிக வேலை இருந்ததில்லை. இவனது தொழில் அப்படி. இவனாகத் தேடிச் சென்று சரக்கு வாங்க வேண்டியது இல்லை. கம்பெனிக்காரர்கள் அவர்களே அனுப்பி வைப்பார்கள். விற்றுக் காசாக்கினால் மட்டும் போதும். கெட்ட பழக்கம் என்று எதுவும் இல்லை. வீட்டுக்கும் ஒரே பிள்ளை. எனவே ஜோராக ஓடிக் கொண்டிருந்தது சந்திரனின் வாழ்க்கை. இது அனைத்துமே சென்ற ஆண்டு வரை தான். இப்போது சந்திரனை ஆட்கொண்டிருந்தது அவனது வயதுக்காரர்களுக்கே

உரித்தான நோய். ஆமாம், காதல் நோய் தான். அந்த நோய்க்கான காரணம் ஐஸ்வர்யா.

ஐஸ்வர்யா. பெயரைப் போலவே அவளும் அழகு தான். அவளது தந்தை ஒரு கல்லூரிப் பேராசிரியர். அவளை ஒரு டாக்டராக்கிப் பார்க்கவேண்டும் என்று அவளது தந்தைக்கு ஆசை. எனவே மருத்துவம் படித்துக் கொண்டிருக்கிறாள். எதையும் டேக் இட் ஈசி என்று எடுத்துக் கொள்ளும் குணமுடையவள் ஐஸ்வர்யா. இருவரும் சந்தித்துக் கொண்டதே ஒரு வித்தியாசமான சம்பவத்தால். அதை இப்போது நினைத்தாலும் இருவரும் சிரித்துக் கொள்வார்கள். அன்று ஞாயிற்றுக் கிழமை. பொழுது போகாமல், தூக்கமும் வராமல் சந்திரன் சினிமாவுக்குச் செல்ல வேண்டும் என்று முடிவெடுத்தான். உடனே கிளம்பியும் விட்டான். மவுண்ட் ரோடிலிருந்த ஒரு அடுக்கு மாடித் தியேட்டருக்குள் வண்டியை விட்ட சந்திரன் படம் ஆரம்பித்த பின்னரே வந்து சேர்ந்தான். அது ஏதோ ஆங்கிலப் படம் போலும். அவசர அவசரமாக சீட்டு வாங்கி தியேட்டருக்குள் நுழைந்தான். ஏற்கனவே படம் ஓடிக் கொண்டிருந்தது! இடைவேளையின் போது தான் கவனித்தான். அந்த பால்கனியில் உட்கார்ந்திருந்தது அவனைத் தவிர இன்னும் ஒரே ஒருவர் மட்டுமே. அதுவும் அழகிய இளம்பெண். அது வேறு யாருமில்லை ஐஸ்வர்யா தான். ஐஸ்வர்யா அவளது தோழிகளும் படத்துக்கு வருவோம் என்று சொல்லி இருந்ததால் தியேட்டருக்கு வந்தவள். கடைசியில் தோழிகள் இருவரும் காலை வாரி விட இவள் மட்டும் தனியாய். அவளுகளைப் பழி வாங்க வேண்டும் என்று மனதினுள் நினைத்தவள் அவர்கள் இல்லாவிட்டால் படம் பார்க்க முடியாதா என்ன? என்று நினைத்துக் கொண்டு அந்த அடுக்கு மாடி சினிமா காம்ப்ளக்சிற்குள் நுழைந்து இருப்பதிலேயே சின்ன தியேட்டரைத் தேர்ந்தெடுத்து அமர்ந்து கொண்டாள். கீழ் வரிசையில் யாரோ சிலர் மட்டும் அமர்ந்திருந்தனர். அவளைக் கண்டதும் என்ன ஈர்ப்பு நிகழ்ந்ததோ தெரியவில்லை! அடுத்த வாரம் அதே போல் ஞாயிற்றுக் கிழமை அதே தியேட்டரில் மீண்டும் ஏதோ ஒரு ஆங்கிலப் படத்தைப் பார்க்கும் சாக்கில் வந்திருந்தான். சரியாக அவளும். ஆனால் இந்த முறை இரு தோழிகளுடன். இருந்தாலும் இவனை அடிக்கடி அந்த இருட்டிலும் அவள் காணத் தவறாமல் இருந்ததை அவனும் கவனித்திருந்தான். சந்திரனின் அழகுக்காகத் தான் தன் மனதை முதலில் பறி கொடுத்தாள் ஐஸ்வரியா. பின்னர் அவனது குணங்கள், சிக்கனம், நேரந் தவறாமை என்று அனைத்தும் அவளுக்குப் பிடித்துக் கொண்டது.

சந்திரனுக்கும் ஐஸ்வரியாவுக்கும் இடையே நடக்கும் காதல் சந்திப்பு பெரும்பாலும் ஞாயிற்றுக்கிழமைகளில் மட்டுமே. அவளும் கல்லூரி செல்ல வேண்டும். அவனும் கடை திறக்க வேண்டும். எனவே மற்ற நாட்களில் இருவருமே பிசி தான். இப்போதும் ஞாயிற்றுக் கிழமை மாலை நேரக் காட்சிக்கு அதே தியேட்டருக்குப் படம் பார்க்கச் செல்வார்கள் இருவரும்!

யசோதையின் கவலை எல்லாம் சந்திரனைப் பற்றித் தான். அவனுக்கும் காலாகாலத்தில் திருமணம் செய்து பார்க்க நினைத்தார். நிறைய பெண்களின் படங்களைக் காட்டியதுண்டு அவனிடமும். அனைவரையும் பிடிக்கவில்லை என்று ஒரே வார்த்தையில் சொல்லி விடும் சந்திரனுக்கு எப்படித் திருமணம் செய்து வைக்கப் போகிறேன் என்று புலம்புவதே யசோதையின் வாடிக்கை. அப்போதெல்லாம் அவனது காதல் பற்றிச் சொல்லி கூடிய விரைவில் திருமணத்திற்கு ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும் என்று நினைத்துக் கொள்வான்

ஆனால் பாவம், அவளும் தான் அந்தப் பதினெட்டில் ஒருத்தி என்று அவனுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை.

## 6. பாகம் - 6

*An out-of-body experience (OBE or sometimes OOBE) is an experience that typically involves a sensation of floating outside of one's body and, in some cases, seeing one's physical body from a place outside one's body (autoscopy). Approximately one in ten people claim to have had an out-of-body experience at some time in their lives.[1] For some, the phenomenon occurs spontaneously, while for others it is linked to dangerous circumstances, a dream-like state, a near-death experience, or use of psychedelic drugs. A few have been able to induce the experience deliberately through visualizations while in a relaxed, meditative state, or through a lucid dream. Relatively little is known with certainty about OBEs.[2] Recent studies have shown that OBEs can be induced by stimulating the angular gyrus at the temporal-parietal lobe junction.*

அனைவருக்கும் கம்பீரமாக வணக்கம் சொன்ன ராம், தனது பேச்சைத் தொடங்கினார்.

"எனக்கு இந்த வாய்ப்பளித்த கமிஷனர் சாருக்கு நன்றி. இந்தத் தொடர் சம்பவங்கள் குறித்த கவலை தான் எனக்கும். இது மிக சவாலான வழக்கு என்றே நினைக்கிறேன். பதினைந்து சம்பவங்கள் எங்கள் காவல் நிலையக் கட்டுப்பாட்டு எல்கைக்குள் நடந்திருப்பதால் மட்டுமல்ல. ஒரு சம்பவத்தின் நேரடி சாட்சி நானே என்பதாலும் தான்.

மொத்தம் நடைபெற்ற சம்பவங்கள் பதினெட்டு. ஒவ்வொரு சம்பவத்திற்கு முன்பும் ஒருவர் இறந்து போய் இருக்கிறார். அந்தப் பிணம் எழுந்து இன்னொருவரைக் கொன்று விட்டு மீண்டும் இறந்து விடுகிறது. இது மட்டுமே இந்த பதினெட்டு சம்பவங்களுக்கும் உள்ள ஒற்றுமை!

இன்னும் சில ஒற்றுமைகளும் உள்ளன. அவைகள் இதோ: ஒன்று பதினைந்து சம்பவங்கள் எங்கள் எல்கைக்குள் மட்டுமே நடந்துள்ளது. இன்னொன்று இரு மருத்துவம் பயிலும் மாணவ, மாணவியின் சாவுகள். அவர்களின் பெயர் ஸ்ரீதர் மற்றும் ஐஸ்வர்யா. இருவரும் மருத்துவக் கல்லூரி மாணவர்கள் என்பது மட்டுமே அவர்களுக்கிடையே உள்ள ஒற்றுமை.

இந்த வழக்கில் நமக்குக் கிடைக்கவிருந்த ஒரு துப்பு கிடைக்காமல் போனதில் எனக்கு மிகுந்த வருத்தம். ராமேஸ்வரம் அருகே இருக்கும் அக்காமடத்தில் நடந்த இதே போன்ற ஒரு சம்பவத்தில் சம்பவம் நடக்கும் முன்னர் இறந்து போன பரமசிவத்தின் மைத்துனர் அவரைக் கொல்லும் முன்னர் ஏதோ பேசியிருக்கிறார். அது என்ன என்று அறிந்து கொள்ள முடிந்திருந்தால் இந்த வழக்கிற்கு மிகவும் உபயோகமாக இருந்திருக்கும். துரதிருஷ்டவசமாக, பிணம் உயிர் பெற்று எழுந்ததுமே அனைவரும் தலை தெறிக்க ஓடி இருக்கின்றனர். தூரத்தில் இருந்து பார்த்த ஒருவர் மட்டுமே பரமசிவத்தின் மைத்துனர் கொல்வதற்கு முன்னர் ஆவேசத்துடன் ஏதோ பேசியதாகச் சொல்கிறார்.

15 சம்பவங்கள் எங்கள் பகுதியிலேயே நடந்திருப்பதால் மொத்த சம்பவங்களின் மூலமும் எங்கள் பகுதியிலேயே இருப்பதாகக் கொள்ளலாம்.

நண்பர்களே, நீங்கள் ஒன்றை எனது இந்தப் பேச்சில் கவனித்திருக்கலாம். அதாவது என் பேச்சில் எங்குமே கொலை என்னும் வார்த்தையே நான் உபயோகிக்கவில்லை. சம்பவம் என்று மட்டுமே உபயோகித்திருக்கிறேன். ஏனென்றால் கொலை என்று நாம் நிரூபிக்க மூன்று விஷயங்கள் வேண்டுமே! 1. கொலையாளி என்ற ஒருவர். 2. கொலைக்கான காரணம் அல்லது நோக்கம் அதாவது மோட்டிவ். 3. கொலை திட்டமிடப்பட்டு நடந்துள்ளதா, அல்லது எதேச்சையாக நடைபெற்றதா அல்லது விபத்தா அல்லது பழி உணர்ச்சியின் வெளிப்பாடா? என்னும் கேள்விகளுக்கு இந்த சம்பவங்களைப் பொறுத்த வரை எந்தக் கேள்விக்கும் விடையளிக்க முடியவில்லை. ஏனெனில் கொலை செய்பவர் மறுவிநாடியே மரித்தும் போகிறார். யாரைக் கைது செய்ய முடியும்?

எனவே என்னைப் பொருத்தவரை இது மனிதர்கள் சம்ப்ந்தப்படாத அமானுஷ்ய சக்திகளாலும் இருக்குமோ என்னும் எண்ணவும் இடம் இருக்கிறது.”

இது வரை கவனமாகக் கேட்ட ஆணையரின் முகத்தில் கவலை ரேகை அழுத்தமாக ஓடியது.

ராம் மேலும் பேசுவதற்கு முன்னர் ஆணையர் அவர் பேச்சைக் குறுக்கிட்டுப் பேச ஆரம்பித்தார்!

## 7. பாகம் - 7

*A near-death experience (NDE) is an experience reported by a person who nearly died or who was clinically dead and revived. Some scientists believe the experience can be explained by hallucinations caused by a dying brain. However, this model of explanation is steadily being challenged by longitudinal studies conducted in the Netherlands and elsewhere (van Lommel, 2004). The experience is surprisingly common, especially since the development of cardiac resuscitation techniques. According to a Gallup poll approximately eight million Americans claim to have had a near-death experience (Mauro, 1992). The experience often includes an out-of-body experience.*

சந்திரனின் வாழ்க்கை ஐஸ்வரியாவின் காதலுடன் இனிமையாகத் தான் சென்று கொண்டிருந்தது. அதிலும் தனது தாய்க்கு ஒரு மருத்துவ மருமகள் வருவது குறித்து மிகவும் சந்தோசப்பட்டான். தனது தாயிடமும் அடிக்கடி உனக்கு எப்படி மருமக வரப்போறான்னு பாரு என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

அது எலெக்ட்ரானிக்ஸ் யுகத்தில் கேசட்டுகள் மறைந்து சிடிக்கள் உள்ளே நுழைகின்ற நேரம். இவன் எலெக்ட்ரானிக் கடை வைத்திருந்ததால் சிடிக்களின் தேவையை உணர்ந்து கொண்டான். எனவே இரண்டு லட்சம் ரூபாய் கடனை வாங்கி அதை சிடிக்களில் முதலீடு செய்தான். முதலில் நன்றாக லாபமும் அள்ளித் தட்டியது இந்த வியாபாரம். இதனால் இருப்பை ஏற்றிக் கொண்டே வந்தான் சந்திரன். ஆனால் அவனது போதாத காலமா என்று தெரியவில்லை. உள்நாட்டிலும் சிடிக்கள் தயார் செய்ய ஆரம்பிக்கப் பட்டது. பெரிய அளவில் விலை இறக்கம் ஏற்பட்டது. இருப்பு இல்லாமல் இருந்தவர்கள் அனைவரும் தப்பித்தனர். இருப்பு அதிகம் வைத்திருந்த சந்திரனோ மிகவும் பாதிக்கப்பட்டான். முதலுக்கே மோசம் வந்து விடும் அபாயம் ஏற்பட்டது.

அவனது தந்தையார் பெயரில் கிராமத்தில் நிலபுலன்கள் இருந்தது. அனைத்தையும் விற்று அந்தக் கடன்களை அடைத்து விட்டு மீண்டும் தனது பழைய கடையிலேயே பழைய மாதிரியே வியாபாரத்தை ஆரம்பித்தான். தனது தந்தையின் சொத்துக்களைக் கொள்ளையடிப்பது போல் இப்படி ஆகிவிட்டதே என்பதில் அவனுக்கும் வருத்தம் தான். இருந்தும் இந்த நிலையாவது நீடிக்கிறதே

என்று நினைத்துக் கொண்டான்.

இவ்வாறிருக்கையில் ஒரு ஞாயிற்றுக் கிழமை. வழக்கம் போல் மாலைக் காட்சிக்கு அந்தத் தியேட்டருக்குச் சென்று ஐஸ்வரியாவுக்காகக் காத்திருந்தான். அவள் வரவில்லை. உடலுக்கு சரியில்லாமல் போயிருக்குமோ என்று தான் முதலில் நினைத்தான். ஆனால் இரண்டு மணி நேரங்களுக்கு முன்னர் போனில் பேசும் போது கூட சொல்லவில்லையே என்று நினைத்துக் கொண்டான். ஆனால், தொலைபேசியில் பேசிக் கொள்ளும் போது இருவரும் இந்தத் தியேட்டர் செல்லும் விசயம் பற்றி பேசிக் கொள்ளவே மாட்டார்கள். ஆனால் சரியாக தியேட்டருக்கு மட்டும் வந்து விடுவார்கள்! அது அவர்களுக்குள் இருந்த ஒரு பேசப்படாத ஒப்பந்தம். படம் முடியும் வரை அவனுக்கு பொறுக்கவே முடியவில்லை. ஏன் ஐஸ்வர்யா இன்று வரவில்லை என்ற கேள்வியே அவனைத் துளைத்துக் கொண்டிருந்தது.

மறுநாள் திங்கட்கிழமை காலை கடையைத் திறப்பதற்காகக் கடைக்குச் சென்றவனுக்கு ஆச்சரியமான ஆச்சரியம். கடையின் வெளியே ஐஸ்வர்யா நின்று கொண்டிருந்தாள்.

# 8. பாகம் - 8

*Parapsychology is the study of certain types of paranormal phenomena (parapsychology comes from the Greek para, "beside, beyond," + psychology, derived from the Greek psyche, "soul, mind," + logos "rational discussion"). The term was coined by Max Dessoir (1889). J. B. Rhine adopted it to refer to the scientific study of paranormal phenomena which are manifestations of psi. According to The Parapsychological Association, an organization affiliated with the American Association for the Advancement of Science, parapsychological phenomena can be categorized thus:*

*These [paranormal] anomalies fall into three general categories: ESP[…] [Extra-Sensory Perception], PK [Psychokinesis], and phenomena suggestive of survival after bodily death, including near-death experiences, apparitions, and reincarnation. Most parapsychologists today expect that further research will eventually explain these anomalies in scientific terms, although it is not clear whether they can be fully understood without significant (some might say revolutionary) expansions of the current state of scientific knowledge. Other researchers take the stance that existing scientific models of perception and memory are adequate to explain some or all parapsychological phenomena.*

ராமை மறித்துப் பேசிய ஆணையர், "நீங்கள் சொல்லும் பலவற்றில் எனக்கு உடன்பாடு இருக்கிறது ராம். ஆனால் இந்த அமானுஷ்யம், பேய், பிசாசு என்று சொல்கிறீர்களே அதைத் தான் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. இது விஞ்ஞான யுகம். இதில் போய் ஆவி அது இது என்று நாம் நமது நேரத்தை வீணடிக்க வேண்டாம்.

இவையாவும் என்னைப் பொருத்த வரை கொலைகளே. இத்தனை கொலைகளுக்கும் ஏதோ ஒரு தொடர்பு இருக்க வேண்டும். அந்தத் தொடர்பில் தான் கொலையாளி இருக்கிறான். அவனை இந்நேரத்திற்குள் நாம் கண்டுபிடித்திருக்க வேண்டும். விட்டுவைக்கும் ஒவ்வொரு விநாடியும் நமது துறைக்கு அவமானம் தான்.

எவ்வளவு சீக்கிரம் பிடிக்க முடியுமோ பிடிக்க வேண்டும். அதற்குண்டான வழிமுறைகளை மட்டும் இப்போது பேசுவோம்." என்றார்.

மற்ற காவலர்கள் தங்களுக்குள் குசுகுசுவெனப் பேசிக் கொண்டனர். ராமே

*தொடர்ந்தார். "இருந்தாலும் நான் நம்பிக்கை இழக்கவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். கடந்த ஒரு வாரமாக எங்கள் பகுதியில் யாரொருவர் இறந்தாலும் அதற்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுத்து காவல்துறை பாதுகாப்பில் தான் அனைத்துச் சடங்குகளும் செய்யப் படுகிறது. ஆணையர் சொல்வது போல் அந்த 18 சம்பவங்களுக்கும் சூத்ரதாரி யாரோ ஒருவர் தான். அவருக்கும் இறந்தவர்களுக்கும் ஏதோ விரோதம் இருக்க வேண்டும். அந்தத் தொடர்பை நம்மால் அறிய முடியாவிட்டாலும் இதை என்னால் ஆணித்தரமாகச் சொல்ல முடியும். ஏனென்றால், ஸ்ரீத்ரைக் கொல்லும் போது அந்தப் பெண்ணுக்கு மேலும் இருவரைக் கொல்லும் வாய்ப்பு இருந்திருக்கிறது. ஸ்ரீதரின் நண்பர் மற்றும் பிணவறைப் பாதுகாவலர். இவர்கள் இருவரும் கூடவே தான் இருந்திருக்கின்றனர். இவர்களைக் கொல்லாமல் சரியாக ஸ்ரீதரைக் கொன்றுவிட்டு இறந்து விட்டாள் அந்தப் பெண். நான் துப்பு துலக்கிய வரை, பதினெட்டுப் பேர்களில் ஒருவரை ஒருவர் தெரிந்தவர் ஸ்ரீதரும் ஐஸ்வர்யாவும் தான். மற்றவர்கள் குடும்பங்களில் விசாரித்ததில் மற்ற பதினேழு பேரைப் பற்றியும் எதுவுமே தெரியாது என்றே சொல்கிறார்கள். அது போல் கொன்ற பின் மரிப்பவர்களுக்கும், கொல்லப்படுபவர்களுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை, அந்தக் கிராமத்தில் இறந்த பரமசிவம் தவிர. அந்தக் குடும்பத்தினரும் மற்ற பதினேழு பேரைப் பற்றியும் தெரியாது என்கிறார்கள். இது கொஞ்சம் சிக்கலான கேஸ் தான். நான் சொன்னதை வைத்து உங்களுக்கு ஏதேனும் க்ளூ கிடைத்தால் சொல்லுங்கள். எனக்கு வாய்ப்பு தந்தமைக்கு நன்றி" என்ற படி அமர்ந்தார் ராம்.*

*ஒரு காவலர் எழுந்து கொல்வதற்கு முன் அவர்கள் இறந்து தான் போனார்கள் என்பதை ஊர்ஜிதம் செய்த மருத்துவர்களை விசாரித்தீர்களா என்றார்.*

*ராம் உடனே எழுந்து, "நன்றாக விசாரித்து விட்டேன். அனைவரும் கை விரித்து விட்டனர். பரமசிவத்தின் மைத்துனர் மருத்துவமனையிலேயே இறந்த பிறகு தான், அவரது உடலை கிராமத்துக்கு எடுத்துச் சென்றிருக்கிறார்கள். அந்த மருத்துவரிடமும் நான் தொலைபேசியில் விசாரித்தேன். அவருக்கு உயிர் வருவதற்கு வாய்ப்பே இல்லை என்றார்!"*

*ஆணையர், "என்ன செய்வதென்று தெரியவில்லை. நமக்குக் குறைந்த கால அவகாசமே இருக்கிறது. யார் உதவியை வேண்டுமானாலும் பெற்றுக் கொள்ளுங்கள்.*

சீக்கிரம் கண்டுபிடியுங்கள். அடிக்கடி என்னைத் தொடர்பு கொண்டு இந்தக் கேஸின் முன்னேற்றம் குறித்து தெரிவியுங்கள். கூட்டம் நிறைவுற்றது" என்றார்.

அங்கு இருந்த ஒரு காவலர் மட்டும் ராமை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார்.

# 9. பாகம் - 9

*SIDDHI (Sanskrit – Accomplished One). A term for different capabilities: Through recognizing emptiness, clarity and openness of the mind, different qualities arise naturally, since they are part of mind. The Buddha, whose personal name Siddharta is based in the root-word and means "he whose aim is accomplished," distinguishes between two types:*

- *Normal Siddhis: all those forces of the conditioned world that transform elements.*
- *Extraordinary Siddhis: the ability to open beings up for the liberating and enlightening truths; to lead to Realization.*

அந்தக் காலைப் பொழுதிலேயே ஐஸ்வர்யாவைப் பார்த்ததில், அவனுக்கு இன்ப அதிர்ச்சி ஏற்பட்டது. என்ன ஐஸ் இந்தப்பக்கம் என்றான். அவளோ நேத்து போன்ல பேசும் போது கூட எனக்கு ஞாபகம் இல்ல. அப்புறம் இந்த கீதா வந்தவுடன் தான் ஞாபகம் வந்தது. நேத்து என் கிளாஸ்மேட் ஒருத்தனோட பிறந்த நாள். எல்லோரும் சேர்ந்து அவனுக்கு ட்ரீட் கொடுத்தோம். அப்புறம் உங்களைப் பார்க்கணும் போல இருந்துச்சா காலையிலேயே வீட்டுக்கு வந்திருப்பேன். சரி, வலது காலை வைத்து வரணும் அது இதுன்னு பார்மாலிட்டிலாம் பார்க்கணும்ல, அதான் கடைக்கு வந்துட்டேன் என்றாள். நிம்மதிப் பெருமூச்சு விட்டபடியே சந்திரன் கேட்டான், "ஆமா, பொறந்த நாள் வந்தா அவங்க தானே ட்ரீட் குடுக்கணும், எதுக்கு நீங்கள்லாம் சேர்ந்து ட்ரீட் குடுக்குறீங்க" என்றான். "அவன் ஒரு ஏழைப் பையன். போதுமா?" என்றாள் ஐஸ்வர்யா. "பெயர்?" என்றான் சந்திரன். "ஸ்ரீதர்" என்றாள்.

சரி சரி. கடையைத் திறக்கவா லீவு வுட்ரலாமா? என்றான் சந்திரன். அது உங்க இஷ்டம். எனக்கு காலேஜ் போகணும்ப்பா என்ற படி கிளம்பினாள் ஐஸ்வர்யா.

அதன்பின் சந்திரனின் காதல் வண்டி வேகமாகத் தான் ஓடிக் கொண்டிருந்தது.

ஒருநாள் தன் தாயை அழைத்துக் கொண்டு செண்ட்ரல் ஸ்டேஷன் வழியாகச் செல்லும் போது தான் ஐஸ்வர்யா அரசு மருத்துவமனைக்குள் வெள்ளைக் கோர்ட்டோடு உள்ளே நுழைவதைப் பார்த்தான். அம்மாவிடம் அவளைக் காட்ட வேண்டும் என்று திடீரென்று ஆசைப்பட்டான். இதை விடத் தன் காதலைச் சொல்ல

வழி இருக்காது என்று நினைத்தானோ என்னவோ? உடனே உள்ளே திருப்பினான் வண்டியை. இங்கே ஏண்டா போற என்ற அம்மாவிடம், உங்க மருமகளைக் காட்டத்தான் அம்மா என்ற படி வண்டியை நிறுத்தினான். மருமகளைக் காட்டப் போறியா? எங்கே? இங்கேயா? என்றார் அவனது அம்மா. அதோ வெள்ளைக் கோர்ட் போட்டுப் போறாளே அவளைத் தான் நான் காதலிக்கிறேன் அம்மா. அவள் பெயர் ஐஸ்வர்யா, டாக்டருக்குப் படிக்கிறா என்ற அவன், இருங்க உங்களுக்கு அறிமுகப்படுத்தி வைக்கிறேன் அப்புறம் நீங்களாச்சு உங்க மருமகளாச்சு என்றான். உள்ளே சென்ற ஐஸ்வர்யா யாருடனோ சிரித்துப் பேசிக் கொண்டிருந்தாள். நேரே அவள் முன்னால் நின்றதும் அவளுக்கும் ஆச்சரியம் தாங்கவில்லை. என்ன இந்தப் பக்கம் என்றாள். இவர் தான் என் அம்மா என்று அறிமுகம் செய்து வைத்தான் சந்திரன். அவளும் நான் அத்தைகூடப் பேசிக்கிட்டு இருக்கேன் இது ஸ்ரீதர் நீங்க இவர் கூடப் பேசிக்கிட்டு இருங்க என்றாள். சந்திரனும் ஸ்ரீதரும் கைகுலுக்கிக் கொண்டனர்! சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு வெளியேறிய அவனது அம்மாவுக்கு மிகுந்த திருப்தி.

சந்திரனுக்கும் மிகுந்த சந்தோசம். அவனது தொழிலில் ஏற்பட்ட இந்த நஷ்டத்திற்கிடையிலும், அவன் மனதில் என்னென்னவெல்லாம் நடக்க வேண்டும் என்று ஆசைப்பட்டானோ அது எல்லாமே நடந்திருந்தது.

அவன் ஆசையுடன் காதலித்த ஐஸ்வரியாவின் இறப்பைத் தவிர.

# 10. பாகம் - 10

*Just like any other natural human ability, different people display differing abilities towards learning and/or spontaneously displaying siddhis with Karma often playing a primary role. Some people are born with siddhis that they exercise without being aware that their particular psychic gift is unusual. In such cases, it may come as a traumatic event to the individual when they learn that their ability is not common and that they are considered a "misfit" by other people not possessing the psychic ability.*

ராமையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்த அந்தக் காவலர் பெயர் சங்கர். தற்போது தான் ஐ.பி.எஸ். முடித்து விட்டு நேரடியாக வேலைக்குச் சேர்ந்திருப்பவர். அசிஸ்டண்ட் கமிஷனர் பதவி வகிப்பவர். துடிப்பு மிக்கவர். இளைஞர். விறுவிறுவென்று எழுந்து ராமை நோக்கி வந்த சங்கர், உங்களிடம் தொலைபேசியில் நிறைய பேசவேண்டியிருக்கிறது உங்கள் செல் போன் நம்பர் தாருங்கள் என்று கேட்டு வாங்கிக் கொண்டு சென்று விட்டார்.

நிலையத்திற்குத் திரும்பும் வழியில் செல்போன் ஒலித்தது. சங்கர் தான் அழைத்திருந்தார். இந்தத் தொடரில் முதலில் இறந்தவர் ஒரு வடநாட்டுக்காரர் மற்றும் கடைசியில் இறந்தவர் ஐஸ்வர்யா. அப்படித்தானே? என்றார். ஆமாம் என்றார் ராம். இந்த இரண்டு சாவுகளும் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்க வேண்டும். இரண்டுக்கும் இடையில் ஆறு மாத இடைவெளி இருக்கிறது. இதற்குள் 18 சம்பவங்கள். கிட்டத்தட்ட 10 நாளைக்கு ஒரு சம்பவம் வீதம் நடந்திருக்கிறது. இப்போது கடைசி சம்பவம் நடந்து ஒரு மாதம் ஆகப் போகிறது. நீங்கள் சொல்லிய விஷயங்களை வைத்துப் பார்க்கும் போது அடுத்து இது போல் ஒரு சம்பவம் நடக்க வாய்ப்பில்லை என்றே என் உள் மனது சொல்கிறது. இதைச் சொல்லத் தான் கூப்பிட்டேன். நீங்கள் விருப்பப்பட்டால் நானும் இந்தக் கேஸில் உங்களுடன் பணி புரிய ஆசைப்படுகிறேன் என்று தொடர்பைத் துண்டித்தார் சங்கர். ராமுக்கும் இதில் சந்தோசம் தான்.

மறுநாள் காலையிலேயே ராமின் நிலையத்துக்கு வந்த சங்கர், அந்தப் பதினெட்டு பைல்களையும் எங்கே காட்டுங்கள் என்ற படி வந்தமர்ந்தார். இது தான் முதலில் இறந்த நார்த் இண்டியனா? என்று கேட்டவர் அந்த கோப்பை ஆழ்ந்து

*படிக்க ஆரம்பித்தார்.*

*இப்படியே அனைத்தையும் ஒவ்வொன்றாகப் பார்த்தவர், "எனக்கும் ஒன்றும் புரிபடவில்லை. நாம் ஏன் நீங்கள் இறுதியாகச் சொன்ன அமானுஷ்யம் என்னும் பாதையில் போகக் கூடாது? என்றார். ராம் சிரித்த படி,"அது ஒரு பாதை அல்லவே! எப்படிப் போக முடியும்?" என்றார்.*

*என்ன இப்படிக் கேட்டு விட்டீர்கள்? அதற்கும் வழி என்னிடம் இருக்கிறது என்றார் சங்கர்.*

# 11. பாகம் - 11

*Buddhism teaches that after a practitioner achieves a certain degree of realization, spiritual power develops. Furthermore, it is acknowledged as well that supernatural powers are not attainable exclusively JUST by Buddhists and Buddhists only, but possible for anyone who has deep religious and spiritual cultivation to develop some kind of "supernormal powers."*

*Siddhi is typically defined as "a magical or spiritual power for the control of self, others and the forces of nature." The siddhis described by occultists and yogis are in actuality supernormal perceptual states available to all human beings. These are absolutely natural abilities that can be explained in highly rational terms. There is nothing mysterious or magical about the siddhis.*

அது என்ன வழி என்று ஆவலுடன் கேட்டார் ராம். "நான் சென்ற ஆண்டில் ஐ.பி.எஸ். முடித்ததும் டி. எஸ். பி. ஆக ஸ்ரீவில்லிபுத்தூரில் போஸ்டிங் ஆனேன். அருகிலேயே இருந்தது மேற்குத் தொடர்ச்சி மலை. அந்த மலைகளில் இல்லாத மூலிகைச் செடிகளே இல்லை என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அது போக அங்கே சித்தர்கள் நிறைய பேர் இருப்பதாகவும் கேள்விப்பட்டிருக்கிறேன். ஒருமுறை அந்த மலைகளில் அங்கேயே வாழும் பளிங்கர்கள் என்னும் மலைவாழ் ஆதி திராவிட மக்களுடன் அடர்த்தியான மலைகளுக்குள்ளும் சென்றிருக்கிறேன். நானும் என் நண்பனும் ஒரு மானைப் பார்த்துச் சுட்டு விட வேண்டும் என்று துப்பாக்கியை எடுத்த போது அங்கே இருந்த ஒரு வயதான ஒருவர் சட்டென என் கையைப் பிடித்தார் பாருங்கள் என்னால் அந்தப் பக்கம் இந்தப் பக்கம் அசைக்க முடியவில்லை. அந்த முதியவருக்கு அவ்வளவு பலம் இருக்கும் என்று நினைக்கவில்லை. அவர் சிரித்துக் கொண்டே அது உங்களை வந்து முட்டியதா? நீங்களாக ஏன் அதன் வாழ்வில் முட்டுகிறீர்கள்? என்றார். பின்னர் தான் பளிங்கர்களிடம் விசாரித்துத் தெரிந்து கொண்டோம். அவர் முக்காலும் அறிந்த முனிவராம். நினைத்தால் எங்கே வேண்டுமானாலும் போவாராம்! பெரிய சித்தராம். பல மூலிகைகள் பற்றியும் அவர் எங்களுக்குக் காட்டிக் கொடுத்தார். இரவில் ஒளிரும் மரங்கள், பாம்புக் கடிக்கான மூலிகைகள் என்று பல மூலிகைகள் பற்றித் தெரிந்து கொண்டோம். அவரிடம் இந்தக் கேஸைப் பற்றிச் சொன்னால் அவரால் உதவ முடியும் என்று நினைக்கிறேன். என்றார்

சங்கர்.

அப்படியானால் நாளைக்கே நாமிருவரும் சென்று வருவோம் என்றார் ராம் அவசரத்துடன்.

அவரைக் கையமர்த்திய சங்கர், அதற்கு முன் நாம் செய்ய வேண்டிய முக்கியமான வேலையொன்று இருக்கிறது என்றார். தொடர்ந்து, “நாம் முதலில் விசாரிக்க வேண்டியது இங்கே யாரையும் இல்லை. ராமேஸ்வரம் அருகில் இருக்கும் அக்காமடத்தில் தான்” என்றவர், அக்காமடத்துக்கும் சென்னைக்கும் என்ன தொடர்பு? யார் வந்து சென்றது? என்பதை இங்கிருந்து கண்டறிவது வைக்கோல் போருக்குள் ஊசியைத் தேடுவது போன்றது. அதே விஷயத்தை அக்காமடத்துக்குப் போய் விசாரிப்பது பாயசத்துக்குள் முந்திரிப்பருப்பைத் தேடுவது போன்றது. ஏற்கனவே அங்கிருந்து விசாரித்து எனக்கு அனைத்துத் தகவல்களும் வந்து விட்டன என்ற ராமைப் பார்த்து சிரித்த சங்கர், “அங்கிருக்கும் காவல் அதிகாரிக்கு இந்தக் கேஸ் பத்தோடு பதினொன்று அத்தோடு இதுவும் ஒன்று. அவருக்கு இதன் முக்கியத்துவம் தெரிந்திருக்காது என்று நினைக்கிறேன். மேலும் நாம் விசாரித்தால் ஏதேனும் துப்பு துலக்க வாய்ப்பு இருக்கிறது என்று நினைக்கிறேன்.”

அன்று இரவே இருவரும் அக்காமடம் சென்று விட்டு அப்புறம் அங்கிருந்து ஸ்ரீவில்லிபுத்தூர் சென்று வருவது என்று முடிவு செய்து கொண்டனர்.

பாவம் அக்கா மடம் செல்வதால் அவர்கள் மேலும் குழம்பப் போகிறார்கள் என்பதும், அந்தச் சாமியார் வெறும் உப்புக்கல்லுக்குக் கூடப் பெற மாட்டார் என்று ராம் முடிவு செய்ததும் தனிக் கதை!

# 12. பாகம் - 12

*Siddhi powers are said to be obtainable by meditation, control of the senses, devotion, herbs, mantras, pranayama, or good birth.*

*Lord Krishna states that:*

*"Whatever mystic perfections can be achieved by good birth, herbs, austerities, and mantras can all be achieved by devotional service to Me; indeed, one cannot achieve the actual perfection of yoga by any other means." (SB 11.15.34)*

*Seeking siddhi powers is often discouraged and considered to be an impediment to spiritual advancement.*

சந்திரனைப் போல் மகிழ்ச்சியாகவும், வாழ்வில் திருப்தியோடும் இருந்தவர்கள் சென்னையிலேயே யாரும் இல்லை எனலாம். அவனே எதிர்பார்த்திராத காதலி, நஷ்டத்திலிருந்து மீண்ட தொழில், அம்மாவையும் சம்மதிக்க வைத்த காதல் என்று அவன் நினைத்த அனைத்தும் அவன் நினைத்தபடியே நடந்திருந்தது. கடவுள் என் பக்கம் மட்டுமே இருக்கிறார் என்பதற்கு இதை விட வேறு என்ன அத்தாட்சி இருக்க முடியும் என்று நினைத்துக் கொண்டான்.

இருந்தாலும் அவனுக்கும் மனதில் ஒரே ஒரு கவலை இருந்தது. அது தான் பொறாமை உணர்ச்சி. பொறாமை உணர்ச்சி என்று சொல்வதை விட தாழ்வு மனப்பான்மை என்றும் சொல்லலாம். அவன் பொறாமைப் பட்டது ஸ்ரீதரைப் பார்த்து. அவன் எப்போது அரசு மருத்துவமனைக்குச் சென்றாலும் ஸ்ரீதரும் ஐஸ்வர்யாவும் சிரித்துப் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்து அவனுக்குப் பொறுமை கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து கொண்டே வந்தது.

ஆனால், ஐஸ்வர்யா தெளிவாகத் தான் இருந்தாள். இருவருக்கும் அந்த மருத்துவமனையில் அருகருகே நாற்காலிகள். ஆண்களை ஸ்ரீதர் பார்ப்பான். பெண்களை ஐஸ்வர்யா பார்ப்பாள். இருவரையும் பிரித்திருந்தது ஒரே ஒரு திரை மட்டுமே. திரை போட்டு இருந்தாலும் இருவரும் சிரித்துக் கொண்டே பேசிக்

கொள்வார்கள். இவள் பேசா விட்டாலும் ஸ்ரீதர் பேசுவான். காரணம் இவன் சிரித்துப் பேசினால் அதுவே வரும் நோயாளிகளுக்குப் பாதி மருத்துவம் செய்த மாதிரி என்று சொல்வான். நோயாளிகள் இந்த டாக்டர் நம்மை செக் பண்ணிய பிறகும் சிரிக்கிறார். அதனால் நமக்குப் பெரிய பிரச்னை உடலில் இல்லை போல என்னும் மன நிலைக்கு வருவார்கள் என்று நம்பினான். அது உண்மை தான் என்று பின்னர் ஐஸ்வர்யாவும் கண்டு கொண்டாள். இதனால் இருவரும் பாராமலே பேசிக் கொள்வது என்பது வழக்கமாகி இருந்தது.

அவ்வப்போது இதைக் கண்ட சந்திரனுக்குத் தாழ்வு மனப்பான்மையும் ஏற்பட்டது. நாமும் இந்த ஸ்ரீதர் போல் படித்திருந்தால் ஐஸ்வர்யா வேறு யாரிடமும் பேசக் கூட மாட்டாள் என்னும் நினைவும் ஏற்பட்டது.

ஒருநாள் ஸ்ரீதரை ஞாயிற்றுக்கிழமை மாலை திரையரங்கில் படம் பார்க்க அழைத்தாள் ஐஸ்வர்யா. சந்திரனைப் பற்றியும் சொல்லியிருந்தாள். சந்திரனைத் தான் நீ காதலிக்கிறாய் என்று எத்தனை முறை சொல்வாய்? அன்றே நீ அறிமுகப்படுத்தியவர் தானே? என்று கேட்ட ஸ்ரீதரிடம், இதெல்லாம் உனக்குப் புரியாது. இன்னைக்கு நீயும் என்னோடு தியேட்டருக்கு வா, நாங்க காதலிக்க ஆரம்பிச்சதில் இருந்து வார வாரம் இங்கே தான் எங்கள் சந்திப்பு தொடர்கிறது. அதை நீயும் பார்க்க வேண்டாமா? என்னைக்கும் கீதா வருவா. இன்னைக்கு நீ வாப்பா. என்றாள்.

மோட்டார் பைக்கில் தியேட்டர் வளாகத்திற்குள் நுழைந்த சந்திரன் கண்ணுக்கு தூரத்தில் இருவரும் சிரித்துப் பேசிக் கொண்டிருப்பது தான் முதலில் பட்டது. இங்கேயே அழைத்து வந்து விட்டாளா என்று எண்ணியவன், அப்படியே வண்டியைத் திருப்பி விட்டான்.

அது தான் அவன் அவ்விருவரையும் சாவதற்கு முன் பார்த்தது.

# 13. பாகம் - 13

*Just like any other natural human ability, different people display differing abilities towards learning and/or spontaneously displaying siddhis with Karma often playing a primary role. Some people are born with siddhis that they exercise without being aware that their particular psychic gift is unusual. In such cases, it may come as a traumatic event to the individual when they learn that their ability is not common and that they are considered a "misfit" by other people not possessing the psychic ability.*

சங்கரும் ராமும் அக்காமடடம் சென்று சேர்ந்த போது காலை 10 மணிக்கு மேல் ஆகியிருந்தது. பெரிய சல்யூட்டாக வைத்த அந்த ஊர் ஆய்வாளரிடம் பேசிய இருவரும் இந்த ஊரைப் பொருத்தவரை பரமசிவம் இறந்தது பேயடித்துத் தான் என்பதில் தெளிவாக இருப்பதாக உணர்ந்தனர். முதல் தகவல் அறிக்கையிலும் அவ்வாறே நிரப்பியிருந்தார் ஆய்வாளர். மதுரையிலிருக்கும் மருத்துவமனை மருத்துவரிடம் விசாரித்ததில் அங்கேயே பரமசிவம் இறந்த பின்னர் தான் அவரது உடலை உறவினர்கள் எடுத்துச் சென்றதாக அவரும் அவரது வாக்குமூலத்தில் சந்தேகமற எழுதியிருந்தார்.

"நான் ஏற்கனவே சொன்னேன். ஏதோ அமானுஷ்ய சக்தி தான் இதில் விளையாடுது." என்றார் ராம். சங்கர், "இப்போ நாம் நேரே பரமசிவத்தின் வீட்டுக்குத் தான் போறோம். அங்கே விசாரிச்சா ஏதாவது கிடைக்கலாம்.", என்றார்.

அந்த ஊரில் அவர்கள் பார்த்ததிலேயே கொஞ்சம் பெரிய வீடாக இருந்தது பரமசிவம் வீடு. நடுவில் பெரிய தாழ்வாரமும் இருந்தது. பரமசிவத்தின் மனைவியைத் தவிர வேறு யாரும் இருப்பதாகத் தெரியவில்லை. பரமசிவத்தின் மனைவியிடம் சிறிது நேரம் பேச்சுக் கொடுத்ததில் அவரது கணவர் இறந்ததை விட அவரது அண்ணன் இறந்ததைத் தான் அவர் பெரிதாக நினைத்துக் கொண்டிருந்தார் என்பதைத் தெரிந்து கொண்டனர்.

"உங்கள் கணவர் இறந்த அன்று என்ன நடந்தது? அவருக்கு குறிப்பிடத்தக்க எதிரிகள் யாரும் இருக்கார்களா? நீங்கள் யார் மீதும் சந்தேகப்படுறீங்களா? உங்க கணவருக்கும் உங்க அண்ணனுக்கும் இருந்த உறவு எப்படி?" என்று கேட்டார் சங்கர்.

*“என் அண்ணன் ஆசுபத்திரியில இருந்து செத்துட்டார்ன்னு தெரிஞ்சதும் எனக்கு உசிரே நின்னு போச்சு சார். என் மேல அவ்வளவு பாசம் வச்சிருந்தாரு. இவரு எங்கயோ கிளம்பிப் போயிருந்தார். அதனால நான் முத ஆளா அங்கே கிளம்பிட்டேன். தகவல் சொல்ல வந்த என் தம்பியை அனுப்பி அவரையும் அண்ணனோட வீட்டுக்கு கூட்டி வரச்சொல்லிட்டு நான் கிளம்பிட்டேன்.*

*ஆனா, என் அண்ணன் வந்து என் வீட்டுக்காரரக் கொல்ற அளவுக்குப் பகையெல்லாம் எப்பவுமே கிடையாது சார். ஆனா, என் வீட்டுக்காரரு எப்பவும் யார் கிட்டயாவது சண்டைய இழுத்துட்டு வந்து தான் நிப்பாரு. அதனால அவருக்கு நிறைய எதிரிங்க இருக்கலாம். ஆனா, பரம்பரைப் பணக்காரவுங்க. அதனால ஊருல எல்லோரும் இவரு கிட்ட பேசுறதுக்கு கொஞ்சம் பயப்படுவாங்க.” என்று சொல்லிக் கொண்டே வந்தவர், திடீரென்று ஞாபகம் வந்தவராய், “இப்போ ஞாபகம் வருது சார். அவரு அன்னைக்கு வீட்ட விட்டு கிளம்பும் போது யார் மேலயோ ரொம்பக் கோவமா இருந்தாருங்க. சின்னப்பய எல்லாம் எங்கூட விளையாடுறான். எங்க போயிருவான்னு பாக்குறேன்னு சொல்லிக்கிட்டு இருந்தாரு. அவ்ளோ தான் தெரியும்” என்றார்.*

*ராம் உடனே, “அவர் எங்கிருந்து உங்க வீட்டுக்கு வந்தார்னு தெரியுமா?” என்றார். அவரும், “எங்க வடக்காம இருக்குற தோப்புல இருந்து தான் வந்தாரு அன்னைக்கு”, என்றார். “சரி அங்கே யார்கிட்ட விசாரிக்கலாம்?” என்றார் ராம். “அங்கேயே தோட்டக்காரன் இருப்பான். அவன் கிட்ட வேணும்னா விசாரிக்கலாம்” என்றார் பரமசிவத்தின் மனைவி.*

*சரியென்று உடனே கிளம்பினார்கள் சங்கரும் ராமும்.*

*பாவம் ஆழந்தெரியாமல் காலை விட்டார்கள்.*

# 14. பாகம் - 14

*The term sadhana means spiritual exertion towards an intended goal. A person undertaking such a practice is known as a Sadhu or a Sadhaka . The goal of sadhana is to attain some level of spiritual realization, which can be either enlightenment, pure love of God (prema), liberation (moksha) from the cycle of birth and death (Samsara), or a particular goal such as the blessings of a deity as in the Bhakti traditions. Sadhana can involve meditation, chanting of mantras (sometimes with the help of a japa mala), puja to a deity, and in rare cases mortification of the flesh or unorthodox practices such as performing one's particular sadhana on a cremation ground. Each type of Yoga or Buddhist tradition entails its own type of sadhana.*

சங்கர், ராம் இருவரும் தோட்டத்தை விசாரித்து அடையும் போது மணி 3 ஆகியிருந்தது. வெய்யில் நன்றாகக் கொளுத்திக் கொண்டிருந்தது.

அந்த வெயிலிலும் அந்தத் தோட்டம் குளிர்ச்சியுடன் இருந்தது. சூரியனின் கோபப் பார்வையை வெல்ல உதவும் ஒரே ஆயுதம் இந்த இயற்கை ஏசி தான் இல்லையா சங்கர் என்று சிலாகித்துச் சொன்னார் ராம். அதை ஆமோதித்த சங்கர், தன்னை அங்கே அழைத்து வந்த சிறு பையனைப் பார்த்து, "நன்றி தம்பி, தோட்டத்தைக் காட்டியதற்கு" என்றார்.

இவர்கள் இருவரையும் தூரத்திலேயே பார்த்த தோட்டக்காரன் அங்கிருந்த ஒரு சிறு குடிசையிலிருந்து இவர்களை நோக்கி வர ஆரம்பித்தான். அவன் குடும்பமும் உள்ளேயே இருந்தது போலும். இவர்கள் அருகில் வந்ததும்,"யார் நீங்க?" என்று தோரணையாக ஆரம்பித்தான். சங்கர், ராம் இருவரும் சீருடையில் செல்லாவிட்டாலும், அவர்களின் உடற்கட்டு, முடிவெட்டு, கம்பீரம் இவற்றைப் பார்த்தாலே காவல் துறையைச் சேர்ந்தவர்கள் என்று கண்டறிந்து கொண்டானோ என்னவோ? வணக்கம் சொன்னான்.

"நாங்க போலீஸ்" என்றவாறு ஆரம்பித்த சங்கர், "உங்க முதலாளி சாவைப் பத்தி விசாரிக்க வந்திருக்கோம்" என்றார். "எங்கிட்டயா? எதுக்கு சார்?" என்றான் தோட்டக்காரன்.

*“உங்க முதலாளி இங்கிருந்து தானே கடைசியா வீட்டுக்குப் போயிருக்காரு? அன்னைக்கு அவர் வந்ததிலிருந்து திரும்பிப் போற வரைக்கு என்ன நடந்ததுன்னு யோசிச்சு ஒன்னு விடாம சொல்லு பாப்போம்” என்ற படி அங்கிருந்த கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்த சங்கர் அவனையும் அங்கே அருகிலிருந்த ஒரு சிறு கல்லில் உட்காரச் சொன்னார்.*

*அதற்குள் அவர்கள் சாப்பிட இளநீர் வந்திருந்தது. “ரொம்ப சந்தோசமாத் தான் இருந்தாருங்க ஐயா. அன்னைக்குத் தான் தென்னையிலிருந்து தேங்காய் பறிக்கும் வேலை ஆரம்பிச்சு இருந்துச்சு. இந்த வருசம் நல்ல காய்ப்பு. அதான் அத மேற்பார்வை பாத்துக்கிட்டு இருந்தாரு. இங்கே அவருக்கு 30 ஏக்கருக்கு மேல இருக்குங்க. இதோ இந்தக் கட்டில்ல தான் உக்கார்ந்து பாத்துக்கிட்டு இருந்தாரு. வெவசாயம் பத்தித் தான் இருக்கும் அவரோட பேச்சு அதிகமா. ஆனா வீட்டுக்கு அன்னைக்குத் திரும்பிப் போகும் போது கொஞ்சம் கோவமாத் தான் போனாரு” என்றான்.*

*ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர் சங்கரும் ராமும். “என்னாச்சு” என்றார் ராம். இந்தத் தோட்டத்துக்கு எதிர இருக்கும் தோட்டமும் ஐயாவோடது தானுங்க. அதப் போன வருசம் தான் 1 லட்ச ரூவாய்க்கு வாங்கினாரு. அது இரண்டு ஏக்கர் இருக்கும். அதே மாதிரி இந்தத் தோட்டத்துக்கு இன்னும் வடக்கால இன்னொரு தோட்டமும் இருக்குங்க. ரோட்டுல இருந்து அந்த தோட்டத்துக்குப் போகணும்னா நம்ம தோட்டத்தத் தாண்டி தான் போகணும். வண்டிப்பாதை புழக்கம் தான். பாதைக்குன்னு தனியா பட்டா எல்லாம் கிடையாது. அய்யா தோட்டத்துக்குள்ள ரொம்ப வருசமா போயிப் பழகுனதுனால அய்யாவும் ஒன்னும் சொல்ல மாட்டாரு. அது 5 ஏக்கரு பெறும். அதுல ஒரு வத்தாத கிணறும் இருக்கு. செம்மண் காடு. இதப் போலத் தான் என்ன போட்டாலும் வரும். அது விலைக்கு வந்துச்சு. அது விலை விஷயமாப் பேசும் போது தான் தகராறு வந்துச்சு. அதனால தான் கோவமாப் போனாருங்க. அதை வில சொன்னவரு மொத்தமா நாலு லட்சம் கேட்டாரு. அதுக்கு ஐயா “பாதையும் கெடையாது உள்ளே தள்ளி வேற இருக்கு, நேத்து தான் எதுக்க ரோட்டுக்கு மேல இருந்த தோட்டத்துக்கு ஏக்கர் 50000 ரூபாயிக்கு வாங்கிருக்கேன். அதனால இரண்டரை லட்சம் தர்றேன்”, அப்படீன்னு சொன்னாரு. ஆனா அதுக்கு அந்தத் தோட்டத்துக்குச் சொந்தக்காரரு, “கிணறு இருக்கு, செவல் தரை, சமுக்கமா*

வேற இருக்கு, மகசூல் வருசத்துக்கே ஒரு லட்சத்துக்கு மேல வரும்'', னு சொன்னாரு. இப்படியே பேச்சு வளந்துக்கிட்டே போயி ஐயா இதுக்கு மேல என்னால கொடுக்க முடியாதுன்னுட்டாரு. ஐயா போன தேர்தல்ல நின்னப்ப அவருக்குப் போட்டியா நின்ன ராமசாமி நாலு லட்சத்துக்கு வாங்கிக்கிறேன்னு சொன்னாருன்னு வந்தவரு சொன்னதும் தான் ஐயாவுக்குக் கோவம் வந்துருச்சி. நீ எப்படி விக்கிறேன்னு நானும் பாக்குறேன். நான் பாத்து வளர்ந்த பய நீ. என் தோட்டத்து வழியாத் தான் ஒனக்குப் பாதையே இருக்கு. எப்படீன்னாலும் நீ எங்கிட்ட தாண்டா வரணும்னு ஆவேசமா சொல்லித் துண்டத் தோள்ல ஒதறிப் போட்டுட்டுக் கிளம்பிட்டாருங்க வீட்டுக்கு. அவ்ளோ தான் எனக்குத் தெரியும் என்று சொன்னான் தோட்டக்காரன்.

''நிலத்தை விக்கிறேன்னு சொன்னவரு யாரு? அவர நாங்க விசாரிக்கணும்'' என்றார் ராம். அவன் இந்த ஊருல இல்லைங்க. பட்டணத்துல இருக்கான் என்றான் தோட்டக்காரன். ''பட்டணம்னா?'' என்ற சங்கருக்கு, ''மெட்ராஸு'' என்று பதிலளித்தான்.

அவன் பேரு என்ன? விலாசம் யாருகிட்டக் கேட்டா கிடைக்கும் என்றார் சங்கர் மறைக்கமுடியா ஆவலுடன்! தாங்கள் அமர்ந்திருந்த கட்டிலிலிருந்து எழுந்தும் விட்டனர்.

''அவன் பேரு பூரணம்'', என்று பேரைச் சொன்னதும் குறித்துக் கொண்டனர் இருவரும். விலாசம் தெரியாதுங்க. வருசத்துக்கு ரெண்டு வாட்டி வருவான். இப்போ அதை ராமசாமிக்கே வித்துட்டான்னு சொன்னாங்க என்றான் தோட்டக்காரன்.

அடுத்ததாக அவர்கள் ராமசாமியிடம் விசாரிக்கச் சென்றனர். அங்கேயும் அவர்களுக்கு வேண்டிய தகவலான விலாசம் கிடைக்கவில்லை. நிலத்தை விற்ற பத்திரத்தைப் பார்த்தனர், அந்த ஊரிலிருந்த ஒரு விலாசமே பூரணத்தின் விலாசம் என்று கொடுக்கப்பட்டிருந்தது.

அடுத்து இருவரும் ஸ்ரீவில்லிபுத்தூருக்குப் பயணத்தை ஆரம்பித்தனர் பேருந்தில்.

''பூரணம்'' என்று வாய்விட்டுச் சொல்லிய சங்கர், ''எப்படிக் கண்டுபுடிக்க?'' என்றார் ராமிடம். சிரித்துக் கொண்டே ராம், ''அப்பவே எங்க ஸ்டேசனுக்குத் தகவல்

குடுத்துட்டேன். டெலிபோன் டைரக்டரி, வோட்டர்ஸ் லிஸ்ட் இதுல பூரணம் அப்படீன்னு பேருல இருக்குறவங்க லிஸ்ட் நாம ஸ்ரீவில்லிபுத்தூர் போறதுக்குள்ள கைக்கு வந்துரும்.'' என்றார்.

அவர்கள் தேடிக்கொண்டே இருக்கப் போகிறார்கள் என்பது அவர்களுக்குத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை.

# 15. பாகம் - 15

*The word Dharma (Sanskrit; "□□□□" in the Devanagari script) or dhamma (Pali) is used in most or all philosophies and religions of Indian origin, the dharmic faiths, namely Hinduism (Sanatana Dharma), Buddhism, Jainism. Dharma also is practiced in the Surat Shabda Yoga traditions. In its oldest form, dharman, it first appears in the Vedas.*

*It is difficult to provide a single concise definition for Dharma (life fails to convey its connoted complexity). The word has a long and varied history and complex set of meanings and interpretations. Certain Westerners and Orientalists have proposed a number of possible translations, from "justice" to "religion", however these definitions have evolved with their associated usage in western culture.*

ஸ்ரீவில்லிபுத்தூர் இவர்கள் போய்ச்சேரும் போது மணி இரவு 10 ஆகி விட்டிருந்தது. சங்கர் காவல்நிலையத்திற்குச் சென்றதும் பழைய டி.எஸ்.பி. வந்திருக்காரு என்று ராஜ உபசாரம் நடந்தது. இருவரும் அன்றிரவு அங்கேயே தங்கினர்.

அதற்குள் ராம் சொன்னவாறு முதலில் பூக்கடை பகுதி டெலிபோன் டைரக்டரியிலிருந்து பூரணம் என்று பெயருடன் இருப்பவர்கள் அல்லது பூரணம் என்று ஆரம்பிக்கும் பெயருடையவர்கள் என்னும் பட்டியல் வந்திருந்தது. மொத்தம் 45 பேர். இவர்கள் அனைவருக்கும், அக்காமடத்துக்கும் உள்ள தொடர்பு என்ன என்பதை ரகசியமாக விசாரிக்கச் சொல்லியிருக்கேன் என்றார் ராம். ஒவ்வொருவரின் சொந்த ஊர் பற்றி விசாரிச்சா தானா வந்துரும் என்றார்.

சரி உங்க சாமியாரை நாளைக்கு இங்கே வரச் சொல்லலாமா? என்றார் ராம் இரவு உணவு அருந்திக் கொண்டே. என்னது அவர இங்க வரச் சொல்றதா? அது சரி. நாம தான் சார் அங்க போகணும். என்றார் சங்கர். இங்கிருந்து ஏழு அல்லது எட்டு கிலோ மீட்டர் மலையேறனும். வருசநாடு, சாப்டூர் ஜமீன் இடம் அப்படீன்னு நிறையாச் சொல்லுவாங்க. தேனி கம்பம் கூட இந்த மலைக்கு அந்தப்பக்கம் தான் இருக்குன்னும் சொல்வாங்க. மேற்குத் தொடர்ச்சி மலை தான் சார் தமிழகம் மற்றும் கேரளத்தின் உயிர்னு சொல்லலாம். கேரளத்தையும் தமிழகத்தையும் பிரிக்குது.

பருவக்காற்றைத் தடுத்து கேரளத்துக்கு மழை நீரை வாரி வழங்குது. இதனால் தமிழகத்துக்குக் கொஞ்சம் மழை கம்மின்னு சொன்னாலும், பொதிகை மலைச்சாரல், வற்றாத ஜீவநதி தாமிரபரணியின் நதி மூலம் என்று எல்லாம் இந்த மேற்கு மலைத் தொடரில் தான் இருக்கு. நாளைக்கு மலையேறப் போறோம். அதனால இன்னைக்கு நல்லா ரெஸ்ட் எடுத்துக்கோங்க என்றார் சங்கர்.

மறுநாள் அதிகாலையே ராமை எழுப்பி விட்ட சங்கர், காலை 6 மணிக்கெல்லாம் மலையடிவாரத்துக்குச் சென்று விட்டனர். கூட ஒரு கான்ஸ்டபிள் துணையுடன் ஏற ஆரம்பித்தனர். ஒரு ஐந்து நிமிடம் நடந்தவுடனேயே, காடு நம்மை விழுங்கி விட்டதோ என்று நினைத்துக் கொண்டார் ராம். ஆம் வந்த பாதையும், செல்லும் பாதையும் தவிர வேறேதும் தெரியவில்லை. கண்ணைக் கவரும் பச்சை வெள்ளமாய் வந்தது போல் அடர்ந்த காடு. ஒரு காடு அடர்ந்தது என்று எப்படித் தெரிந்து கொள்வது? அந்தக் காட்டு இலைகள் கரும்பச்சை நிறத்தில் இருக்கும் என்று எப்போதோ படித்தது இப்போது ஞாபகத்துக்கு வந்தது அவருக்கு. சில்வண்டுகள் ரீங்காரம் இட்ட படி இருந்தன. செல்லும் வழியெங்கும் நீரோடைகள், பாறைகள் என்று வந்து கொண்டே இருந்தது. ஒரு மணி நேரம் ஏறியிருப்பார்கள். என்ன ஒரு ஆறு கிலோ மீட்டர் வந்திருப்போமா என்றார் ராம். கூட வந்த கான்ஸ்டபிள் சிரித்துக் கொண்டே, ஒரு ரெண்டு கிலோ மீட்டர் வந்திருப்போம் சார். இன்னும் இப்போ வந்தது போல நாலு மடங்கு தூரம் போகணும், என்றதும் ராமுக்கு மலைப்பாக இருந்தது. சங்கர், அதெல்லாம் ஒன்னும் கஷ்டமில்லை சார். மலையேறும் போது வாயால் மட்டும் மூச்சு விடக் கூடாது அவ்ளோ தான். கஷ்டமா இருந்தா கொஞ்ச நேரம் ரெஸ்ட் எடுத்தா மீண்டும் புத்துணர்ச்சி வந்துடும் என்றார். எல்லாம் டிரெயினிங் டயத்துல பயிற்சி பண்ணியது. பதினஞ்சு வருசமாச்சு. இத மாதிரி மலையேத்தமெல்லாம் செய்ததில்ல என்றார் ராம். பாதி தூரத்திலேயே பளிங்கர்கள் என்றழைக்கப்படும் மலைவாசிகள் குடியிருப்பு இருந்தது. அங்கு மின்சாரமெல்லாம் கிடையாது.

பளிங்கர்கள் தலைவனைக் கண்டு கான்ஸ்டபிள் வந்த விசயத்தைச் சொல்லி சித்தரைப் பாக்க வந்திருக்காங்க என்று சொன்னார். எல்லாம் சரி தான். ஆனா இப்போ கிளம்பினாக் கூட இருட்டிடுமே. இங்கே தங்கியிருந்து விட்டுப் போகலாமே என்றார் பளிங்கர் தலைவர். இல்லை நாங்க அங்க போய் தங்கிக்கிறோம் என்றார் ராம். மதிய

உணவை அங்கேயே முடித்தனர். ஒரு மணி நேரம் ஓய்வு எடுத்தனர்.

"கருப்பு!" என்று அழைத்த பளிங்கர் தலைவர், பெயருக்கேற்றபடி கருப்பாகவே வந்த ஒருவனிடம், இவுங்க பெரிய ஆபிசருங்க, சித்தரப் பாக்கனுமாம், கூட்டிப்போ என்றார்.

சரியென்று தலைமட்டும் அசைத்த கருப்புடன் மூவரும் கிளம்பினர்.

கருப்பு வெறும் பாதை மட்டும் காட்டுபவனில்லை என்பதைத் தெரிந்து கொண்டனர் சங்கர், ராம் இருவரும்.

# 16. பாகம் - 16

*Dharma" derives from the verbal root dhri, which simply means "manner of being." The term must therefore be understood in its original (i.e. metaphysical) context, that of a conformity to a divine or creative principle at work in an individual and in nature. It represents the individual's internal law, to which obedience must be given if that individual life is to live in accordance with a divine will. This is what Hindus consider the sole or primary purpose of life. It explains how justice finds its place among the many modern definitions of the word dharma.*

கருப்பு முன்னே வழிநடத்திச் செல்ல மெல்ல நடந்தனர் மூவரும் அவன் பின்னே.

கருப்பு வெறுமனே வழிநடத்திச் செல்பவனாக மட்டுமின்றி பல விஷயங்கள் தெரிந்தவனாக இருந்தான். முக்கியமாக காட்டு விலங்குகளின் பாஷைகள், மரங்களின் தன்மைகள், பாதையல்லாத பாதைகள் என்று புலனுர்பவனாக இருந்தான். முதலில் காட்டுக் குரங்குகள் தான் அவர்களை வரவேற்றன. நீங்க பாட்டுக்கு கண்டுக்காம வாங்க, எந்தக் குரங்கின் முகத்தையும் கூர்ந்து பாக்காதீங்க, கையிலுள்ளதப் புடுங்கிப் போடும் என்றான் கருப்பு.

முதலில் ஒற்றையடிப் பாதையாக ஆரம்பித்த பாதை போகப் போக அரையடிப் பாதை, பின்னர் காலடிப்பாதை அப்புறம் ஒன்றுமில்லாப் பாதையானது. சாமியார் எப்பவும் ஒரே இடத்துல தான் இருப்பாரா? கேட்டார் ராம். இல்லை சாரே, காட்டுக்குள்ள ஒரு கோயில் இருக்கு. அங்கே சாமி கும்பிட எப்பவும் வருவாரு சாயங்காலமும் காலைலையும். அப்போத் தான் அவரைப் பாக்கலாம். அப்புறம் எங்கிட்டாவது அலையப் போயிருவாரு. தனக்குத் தானே எப்பவும் சிரிச்சிக்கிட்டே இருப்பாரு. அப்புறம் ஒரு முக்கியமான விசயம், இந்த மேக்கு மலக் காட்டுக்குள்ள இருக்குற விலங்குங்க நாலு. ஒன்னு யானை. அப்புறம் கரடி. அப்புறம் காட்டெருமை, அப்புறம் காட்டுப்பன்னி. இதுல யானை தான் பயமில்லாதது. காட்டுப்பன்னி தான் ரொம்பக் கொடுமையானதுங்க என்று சொல்லிக் கொண்டே வந்தவன் ஒரு நிமிடம் நின்றான். நிதானித்தான். திடீரென ஒரு திசையைச் சுட்டிக் காட்டினான். அந்த இடத்தில் மட்டும் மரங்கள் வேகமாக அசைந்து கொண்டிருந்தன.

பெரிசு அதாங்க யானை இங்கே இருக்கு என்றவுடன் அனைவருக்கும் மூச்சே நின்றது போல் இருந்தது. இவ்வளவு ரிஸ்க் எடுக்கணுமா என்று கூட ராம் நினைத்தார்.

அங்கே பாருங்க என்று சற்றுத் தொலைவில் காட்டினான். யானைக் கூட்டம் ஒன்று கடந்து சென்றது. யானை கூட்டமா இருக்குற வரைக்கு பயமே இல்லைங்க. தனி யானைய மட்டும் பாத்துரவே கூடாது. அம்புட்டுதேன்! அதே சமயம், காட்டுப்பன்னி கூட்டமா வந்தா சட்னி தான் என்றான் சிரித்துக் கொண்டே! தனியா வந்தா அன்னைக்கு விருந்து நமக்குத்தான் என்றும் சொல்லிக் கொண்டான்!

மாலை ஐந்து மணியானது. ஐயா எல்லாத்துக்கும் சொல்லிப்புட்டேன், இந்த வேகத்துல போனோம்னா கோயிலுக்குப் போக மாட்டோம், பரலோகத்துக்குத் தான் போவோம். இன்னும் ஒரு மணி நேரமாவது நடக்கணும் என்றான் கருப்பு. இப்போ மணி ஐந்து தானே, இருட்டுறதுக்குள்ளே அங்கே போயிரலாமே என்றார் ராம். இங்கே இன்னும் அரை மணி நேரத்துல உங்க கையே உங்களுக்குத் தெரியாது. டார்ச் லைட்டெல்லாம் வேலைக்காகாது. அப்புறம் ஒரு மணி நேரப்பயணம் மூனு மணி நேரமா ஆயிரும். அதனால நடையை எட்டிப் போடுங்க என்ற படி வேகமெடுத்தான் கருப்பு.

அப்புறம் யாரும் அதிகம் பேசவில்லை. பத்துப் பதினைந்து நிமிடம் தான் ஆயிருக்கும். கொஞ்சம் கொஞ்சமாக இருட்ட ஆரம்பித்து இருந்தது.

கருப்பு முன்னே நடந்து கொண்டே, தன் வேட்டிக்குள் மறைத்து வைத்திருந்த உரிமம் இல்லாத கள்ள நாட்டுத் துப்பாக்கியைக் கையிலெடுத்தான்!

# 17. பாகம் - 17

*A yogi or yogin (in Sanskrit yogini is used as a feminine alternative) is a term for one who practices yoga. These designations are mostly reserved for advanced practitioners. The word "yoga" itself - from the Sanskrit root yuj ("to yoke") - is generally translated as "union" or "integration" and may be understood as union with the Divine, or integration of body, mind, and spirit.*

*In the Fourth Way teaching of Gurdjieff the word yogi is used to denote the specifically mental path of development, compared with the word fakir (which Gurdjieff used for a path of physical development) and monk (which he used for the path of emotional development).*

கருப்பு துப்பாக்கியை எடுத்துக் குறிபார்த்துச் சுட்டான்! சங்கரும் ராமும் துப்பாக்கிச் சத்தத்தைக் கேட்டதும் அதிர்ந்து போயினர். சுதாரித்துத் தங்கள் துப்பாக்கியை எடுப்பதற்குள் கருப்பு மீண்டும் சுட்டான். துப்பாக்கிச் சத்தத்தில் காடே அதிர்ந்தது. ஒரு சிறு உறுமலுடன் சத்தமும் அடங்கியது. என்ன சார், பயந்துட்டீங்களா? காட்டுப்பன்னி, எம் பெஞ்சாதிக்கு ரொம்பப் புடிக்கும். அதான் சுட்டேன் என்றான் சிரித்துக் கொண்டே.

இந்தத் துப்பாக்கி ஏது? உரிமம் உண்டா இல்லையா? என்றெல்லாம் கேட்கும் நிலையில் அந்தக் காவலர்கள் இல்லை. தங்கள் நடையைத் துரிதப்படுத்தினர். அரைமணிநேரப் பயணத்தில் மூவருமே களைத்திருந்தனர். மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்கியது. கருப்புக்கு மட்டும் இரைக்கவே செய்யாதோ என்று நினைக்கும் படி அவன் எந்தக் கவலையுமின்றி நடந்து கொண்டிருந்தான். அவனுக்கு அது பழகியிருந்ததால் சாத்தியமாயிற்று.

இன்னும் பத்து நிமிசம் தான் என்றவன், டார்ச் லைட்டைக் கையில் வைத்துக் கொள்ளுங்கள் என்றான். டார்ச் லைட் உயிர்ப்பிக்கப்பட்டது. இருந்தாலும் அடர்ந்த காட்டின் இருளுக்கு முன்னால் அவர்களின் டார்ச் லைட் பெரிதாக உபயோகப்படவில்லை. சிறிது தூரம் சென்றதும், இனி கவலையில்லை என்றான் கருப்பு. ஆம் அந்த அடர்ந்த காட்டின் நடுவே ஒரு சிறு வெட்ட வெளி இருக்கும் என்று நினைத்துக் கூடப்பார்க்க முடியவில்லை.

கொஞ்சம் கொஞ்சமாக நெடுதுயர்ந்த மரங்களிலிருந்து புல்வெளியாக மாறியிருந்தது இடம். காரணம் அது சரியான பாறைப் பிரதேசம். ஹும். வந்தாச்சு. உட்காருங்க என்று தரையைக் காட்டினான் கருப்பு. கோயில் எங்கே? என்றார் ராம். சங்கரும், போன தடவை சாமியைப் பார்த்த போது இந்த இடத்துக்கு வரவில்லையே என்றார். அதெல்லாம் தெரியாதுங்க, இங்க தான் சாமி இருப்பாரு என்றவன், ஒரு பெரிய பாறையைக் காட்டி இங்க தான் பூசை பண்ணுவாரு சாமி என்றான். அங்கே கோவிலோ, சிற்பமோ, சிலையோ எதுவுமே இல்லை!

சரி, என்று காத்திருக்க ஆரம்பித்தனர் அனைவரும். சுத்தமாக இருட்டி விட்டது! விலங்குகளெல்லாம் இங்கே வராதா? என்றார் ராம். இங்கே தண்ணீ கெடயாது. அதனால விலங்குங்க அவ்வளவா வராது. காலையில உங்களக் கூட்டிப் போறேன். தண்ணி இருக்குற இடத்துக்கு என்றான். இன்னும் கொஞ்ச நேரத்துல வெள்ளி முளச்சிரும். அப்புறம் அமாவசையானாலும் வெளிச்சம் தெரியும் என்றான். பாவம் அவனுக்கெங்கே தெரியும் அது வடக்கு தெற்காய் வானத்தையே அளந்து நிற்கும் பால்வெளி வீதியின் வெளிச்சம் என்று!?

சிறிது நேரம் கழிந்தது. எங்கிருந்தோ முதியவர் ஒருவர் வரக்கண்டனர். கருப்பு மரியாதையுடன் எழுந்து கொண்டான். சங்கரும் தான். ராமும் மெல்ல எழுந்தார். வந்த முதியவர் கருப்பை அடையாளம் கண்டு கொண்டார். புன்முறுவல் செய்தார். சங்கரையும் பார்த்தார். அவரையும் அடையாளம் கண்டு கொண்டாரோ? ராமைப் பார்த்தார், எந்த உணர்ச்சியையும் காட்டவில்லை.

பாறைக்குச் சென்று அதன் முன்னே அமர்ந்து தியானிக்க ஆரம்பித்து விட்டார். ஒரு அரைமணி நேரம் கல்லாய் அமர்ந்திருந்திருப்பார். பின்னர் எழுந்து அந்தப் பாறையைக் கட்டித் தழுவுவது போல் கட்டிக் கொண்டார்!

பின்னர் மெதுவாக இவர்கள் அருகிலே வந்தார். அவர்களை அமரச் சொல்லித் தானும் அமர்ந்து கொண்டார். ராம் அவரை மேலிருந்து கீழாக ஒரு முறை அந்த மெல்லிய வெளிச்சத்தில் கண்களாலேயே அளந்தார். பார்க்க வயதான தோற்றம். தாடி மீசை மழித்து எத்தனை நாள் ஆனதோ? ஆனால் உடல் சுத்தமாக இருந்தார். சாமியார் என்பதற்கு புற அடையாளம் அவரிடம் வேறு எதுவுமே இல்லை. சாதாரண வேட்டி மட்டும் உடுத்தி இருந்தார். அதுவும் மிகப்பழமையானதாக இருந்திருக்க

வேண்டும். ஆங்காங்கே கிழிந்திருந்தது. செருப்பென்றால் என்னவென்றே தெரியாத பாதங்கள்.

அவரை வணங்கிய சங்கரைப் பார்த்து என்ன விசயம்? என்றார் சாமி. பதில் பேச ஆரம்பித்த சங்கரைப் பார்த்து என்ன நினைத்தாரோ? இன்னைக்கு வேண்டாம். நீங்க ஓய்வெடுங்க. இங்கேயே படுப்போம். நாளைக்குக் காலையில் பேசிக் கொள்ளலாம் என்றவர் கருப்பைப் பார்த்து அங்கே ஒரு பையில தினைமாவு இருக்கு. எல்லாத்துக்கும் குடு என்றார்.

சுத்தமான மலைத்தேனும், தினைமாவும் ஆசையாய்த் தின்றான் கருப்பு. சாமியார் எதுவும் சாப்பிடவில்லை. மற்ற மூவரும் விக்கி விக்கி ஒரு வழியாகச் சாப்பிட்டு முடித்தனர். இரவு தூங்க ஆரம்பித்தனர்.

# 18. பாகம் - 18

*Maya (Sanskrit m□y□, from m□ "not" and y□ "this"), in Hinduism, is a term describing many things. Maya is the illusion that the phenomenal world of separate objects and people is the only reality. For the mystics this manifestation is real, but it is a fleeting reality; it is a mistake, although a natural one, to believe that maya represents a fundamental reality. Each person, each physical object, from the perspective of eternity is like a brief, disturbed drop of water from an unbounded ocean. The goal of enlightenment is to understand this—more precisely, to experience this: to see intuitively that the distinction between the self and the universe is a false dichotomy. The distinction between consciousness and physical matter, between mind and body, is the result of an unenlightened perspective.*

காலை 6 மணிக்கெல்லாம் எழுந்து விட்டனர் அனைவரும். காரணம் அப்போதே சூரியன் விழித்து விட்டான். மேற்குத் தொடர்ச்சி மலையில் இவர்கள் கிழக்குப் புறம் இருந்ததால் காலையிலேயே சூரியனின் தரிசனம் கிடைத்ததில் வியப்பில்லையல்லவா?

வாங்க சாமி குளிக்கப் போயிருக்காரு. நாமளும் அருவிக்கரைக்குப் போவோம் என்ற படி கிளம்பினான் கருப்பு. இரவில் பார்த்ததற்கும் பகலில் பார்ப்பதற்கும் உள்ள வித்தியாசத்தைக் கண்டார் ராம். இங்கா படுத்திருந்தோம்? இந்த வழியாகவா வந்தோம்? என்றெல்லாம் நினைத்துப் பார்த்தார். கொஞ்ச தூரம் கருப்பின் வழிகாட்டலில் நீரோடையைக் கண்டனர். அருகிலேயே சிறிய அருவி விழுந்து கொண்டிருந்தது. இந்த அருவி எப்பவும் வத்தாதுங்க என்ற கருப்பு. சாமி ஏற்கனவே குளிச்சிட்டுப் போயிட்டாரு போல என்றான். நாம் வந்த வழியில் வரலியே என்றார் ராம். போகும் போது வேற வழியிருக்கு என்றான். காலைக் கடன்களை அங்கேயே முடித்து விட்டு, அலுப்பும் களைப்பும் நீங்க ஆனந்தமாக அரை மணி நேரத்துக்கும் மேல் நீராடினர் மூவருமே!

சோப்பு, ஷாம்பு என்று எதுவுமே தேவைப்படாத இயற்கைக் குளியல் அது. வெளியே வரவே மனமின்றி குளித்துக் கொண்டே இருந்தவர்களை கருப்பு தான் வெளியே அழைத்தான். சாமியை இன்னும் கொஞ்சம் நேரம் கழித்துப் போனால்

பாக்க முடியாது என்றதும் உடனே வெளியேறினர்!

இப்போது வேறொரு வழியில் கொஞ்சம் கரடு முரடான பாதையில் செல்ல ஆரம்பித்தனர். அந்தப் பாதையிலேயே போயிருக்கலாமே என்ற சங்கரிடம் கருப்பு அதோ அங்கே பாருங்கள் என்றான். சாமி நேற்று எவ்வாறிருந்தாரோ அதே போல் நிஷ்டையில் அமர்ந்திருந்தார். அவர் உடலில் ஒரே ஒரு கோவணம் மட்டும் உடுத்தி இருந்தார். இவர்கள் தங்கியிருந்த இடம் கீழே இருந்தது! ஓ! நேற்றுப் பார்த்த அந்தப் பெரிய பாறையின் மேல் இப்போது இருக்கிறோமோ என்று நினைத்துக் கொண்டார் ராம். அந்தப் பாறையின் மேல் ஒரு லிங்கம் இருந்தது. அது சிற்பிகளின் கைப்படாத சுயம்பு லிங்கம் என்பதைப் பார்த்தாலே தெரிந்தது. கல்லென்று பார்த்தால் அது லிங்கமில்லை, லிங்கமென்று பார்த்தால் அது கல்லில்லை!

ஒரு பத்து நிமிடம் போயிருக்கும். மெல்லக் கண் விழித்த சாமியார் அவர்களை அருகில் அழைத்தார். இப்போ சொல்லுங்க என்ன விசயம்? என்றார்.

சங்கர், மெல்ல, நான் ஏற்கனவே உங்களைப் பார்த்திருக்கேன் சாமி. நாங்க போலீஸ்காரங்க. சென்னையிலிருந்து வாரோம். ஒரு முக்கியமான கேஸ் விஷயமா உங்க கிட்ட கேட்டா எதுவும் தகவல் கிடைக்குமோங்குற ஆசையில வந்திருக்கோம் என்றார்.

எந்தக் கேஸு? அந்த பதினெட்டுப் பேரை பொணம் கொன்ன கேஸா? என்று போட்டார் சாமியார் ஒரு போடு!

# 19. பாகம் - 19

*In Hinduism, Maya must be seen through in order to achieve moksha (liberation of the soul from the cycle of death and rebirth) - ahamkar (ego-consciousness) and [karma] are seen as part of the binding forces of Maya. Maya is seen as the phenomenal universe, a lesser reality-lens superimposed on the one Brahman that leads us to think of the phenomenal cosmos as real. Maya is also visualized as part of the Divine Mother (Devi) concept of Hinduism. In the Hindu scripture 'Devi Mahatmyam,' Mahamaya (Great Maya) is said to cover Vishnu's eyes in Yoganidra (Divine Sleep) during cycles of existence when all is resolved into one. By exhorting Mahamaya to release Her illusory hold on Vishnu, Brahma is able to bring Vishnu to aid him in killing two demons, Madhu and Kaitabh, who have manifested from Vishnu's sleeping form. Shri Ramakrishna often spoke of Mother Maya and combined deep Hindu allegory with the idea that Maya is a lesser reality that must be overcome so that one is able to realize his or her true Self.*

என்ன? அந்தக் கேஸு தானா? என்று கேட்ட சாமியாரைப் பார்த்து அதிர்ச்சியுடன் பேச்சேதும் இல்லாமல் இருந்தனர் சங்கரும் ராமும். மெல்ல ஆம் என்று தலையசைத்த சங்கர், உங்களுக்கு எப்படித் தெரியும் என்றார்.

சிரித்துக் கொண்டே கருப்பைக் கை காட்டிய சாமியார், அந்தப் பையை எடுத்து வா என்றார். தூரத்தில் மரத்தில் தொங்க விட்டிருந்த அந்தப் பழைய மஞ்சள் பையை அப்போது தான் பார்த்தனர். எடுத்து வந்த பையிலிருந்து ஒரு செய்தித்தாளை எடுத்த சாமி அவர்களிடம், இன்னைக்குத் தான் இந்தச் செய்தி பத்திரிகையில போட்டிருக்காங்க. நான் எதேச்சையாத் தான் கேட்டேன் என்றார். ஆம்! அது அன்றைய செய்தித்தாள்! கொட்டை எழுத்தில் வெளி வந்திருந்தது. கமிசனரால் தாக்குப் பிடிக்க முடியல போல என்றார் ராம். பத்திரிகைக்காரங்க எத்தனை நாள் தான் சும்மா இருப்பாங்க? இன்னைக்கு பரபரப்பு செய்தி வேறெதுவும் அரசியலில் இருந்திருக்காது. அதான் இன்னைக்குப் போட்டாங்க போல இருக்கு என்ற சங்கர், ஆமா உங்களுக்கு இங்கே எங்கிருந்து நியூஸ்பேப்பர் கிடைக்கிறது என்றார் சந்தேகத்துடன்.

தினமும் எல்லாம் வராது ஐயா, என்ற சாமியார், எப்பவாவது யாராவது

வனத்துறை அதிகாரிங்க வந்தாங்கன்னா கொண்டு வந்து குடுப்பாங்க. நீங்க வர்றதுக்குக் கொஞ்ச நேரம் முன்னால ஒருத்தர் வந்திருந்தாரு. உங்களுக்கு அறிமுகம் படுத்தலாம்னு பாத்தா உங்களை ஆளைக் காணோம். அனேகமா கொஞ்ச நேரத்துல திரும்பி வந்தாலும் வருவாரு என்றார்.

அது சரி, எங்கிட்ட எதுக்கு விசாரிக்க வந்திருக்கீங்க? என்ற சாமியாரிடம், இந்தக் கேஸைப் பல வழிகள்ல விசாரணை பண்ணிக்கிட்டு இருக்கோம் சாமி. இதுல அமானுஷ்ய சக்தி எதுவும் இந்தக் கொலைகளுக்குக் காரணமா இருக்குமோன்னு சந்தேகம் இருக்குது. அதைத் தீர்க்கலாம்னு தான் உங்ககிட்ட வந்தோம் என்றார் சங்கர்.

நான் சாதாரண மனுசன், எங்கிட்டப் போயி அமானுஷ்யம் அது இதுன்னு பெரிய வார்த்தையெல்லாம் சொல்றீங்க? என்று கேட்ட சாமி, "வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு" என்று மட்டும் சொன்னார்.

"இந்த உலகத்துல எல்லாமே ஏதோ காரண காரியங்களுக்காகத் தான் படைக்கப்பட்டிருக்கு. அனைத்து நிகழ்ச்சியும் ஒன்னையொன்னு பின்னிப் பிணைந்திருக்கும் படி ஆண்டவன் கதையமைச்சிருக்கான். கதைப்படி ஓடிக்கிட்டிருக்கு. கதய யாராலும் மாத்த முடியாது. அப்படி மாத்துற மாதிரி கதையெழுதுனா அப்புறம் அது ஆண்டவனே இல்ல" என்று ஏதேதோ பேச ஆரம்பித்தார் சாமியார்.

ராம் குறுக்கிட்டு, "அப்போ இந்தக் கொலைகள் நடப்பதும் விதிப்படி தான் என்கிறீர்களா? நல்லதைப் படைச்ச சாமி எதுக்கு கெட்டதையும் படைக்கனும்?" என்றார்.

"ஆமா! எல்லாமே அவன் விதிப்படி தான் நடக்கு," என்றவர், மேலும், "இந்த உலகத்துல நல்லது கெட்டதுன்னு எதுவும் இல்ல ஐயா!" என்றார் சாமியார்.

கெட்ட கிருமியப் படைச்ச ஆண்டவன் அதை அழிக்க உடம்புல எதிர்ப்பு சக்தியையும் படைச்சிருக்கான்ல. அது மாதிரி யாரோ கொலை செய்றான், அவனைக் கண்டுபுடிக்க உங்கள அனுப்பிச்சிருக்கான்ல. உங்க சொந்தங்க யாரும் கொல்லப்பட்டிருக்காகளா? இல்லியே. உங்க கடமை அது. அது மாதிரி, கடமையச் செய்யனும். கிருமி அதோட கடமையைச் செய்யும். எதிர்ப்பு சக்தி அதோட

கடமையச் செய்யும். அவ்ளோ தான். இதுல நல்லது கெட்டதுன்னு கிடையாது. கிருமிகிட்டப் போய்க் கேட்டா அதுக்கும் பல நியாயம் இருக்கும். நியாயமும் நாளுக்கு நாள் ஆளுக்கு ஆள் மாறும்ல என்று தத்துவத்தைச் சொன்னார் சாமியார்.

நீங்க என்கிட்ட எதைப் பத்தி விசாரிக்கப் போறீங்கன்னு தெரியல. நீங்க நினைக்கிற மாதிரி எனக்கு ஒன்னும் தெரியாது. சட்டுப்புட்டுனு கேட்டு முடிச்சீங்கன்னா, நான் எம்பாட்டுக்குப் போய்க்கிட்டே இருப்பேன் என்றார்.

அப்போது ராம் மனதில் இந்தச் சாமியார் வெறும் உப்புக்கல்லுக்குக் கூடப் பெற மாட்டார் என்ற நினைப்புத் தான் ஓடிக் கொண்டிருந்தது.

# 20. பாகம் - 20

*An allegory (from Greek □□□□□, allos, "other", and □□□□□□□□□□, agoreuein, "to speak in public") is a figurative mode of representation conveying a meaning other than (and in addition to) the literal.*

*Plato's Allegory of the Cave is perhaps the best known of his many allegories, metaphors, and parables. The allegory is told and interpreted at the beginning of Book 7 of Republic (514A–520A).*

*Imagine prisoners who have been chained since childhood deep inside a cave. Not only are their limbs immobilized by the chains; their heads are chained as well so that their gaze is fixed on a wall.*

*Behind the prisoners is an enormous fire, and between the fire and the prisoners is a raised walkway, along which shapes of various animals, plants, and other things are carried. The shapes cast shadows on the wall, which occupy the prisoners' attention. When one of the shape-carriers speaks, an echo against the wall causes the prisoners to believe that the words come from the shadows. (contd…)*

அப்புறம் கொஞ்ச நேரம் அமைதியாகக் கண்ணை மூடிக்கொண்டிருந்தபடி இருந்த சாமியாரிடம், சங்கர் தான் கேட்டார். செத்த பொணம் எழுந்து ஒருத்தரைக் கொன்னுட்டு திரும்பவும் செத்துப் போயிருது சாமி. செத்த பொணம் பொழைக்க வாய்ப்பிருக்கா? என்றார்.

சிரித்துக் கொண்டே கேட்ட சாமியார், "எல்லாம் அவன் விளையாட்டு. எதுவும் எப்பவும் நடக்கலாம்" என்றார்.

"செத்து எவ்வளவு நேரத்துக்கு அப்புறம் உயிர் கொள்ளுது?" என்றார் கேள்வியுடன். "சில நேரங்கள்ல 7 மணி நேரம் கூட ஆகியிருக்கு." என்றவுடன் சங்கரை ஆச்சரியமாகப் பார்த்த சாமியார், "அப்படியா? ஏழு மணி நேரமா?" என்றார்.

"ஆம் சாமி" என்றார் சங்கர். "அப்படியானால் இது நிச்சயம் ஒரு மனிதனின் வேலை தான்" என்றார் சாமி!

“என்ன சாமி சொல்றீங்க?” என்றார்கள் இருவரும். இப்போது ராமின் மனம் துள்ளிக் குதித்தது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

“ஆமாய்யா, இது ஒரே மனிதனின் வேலையாத்தான் இருக்கும். இது ஒரு வித்தை. கூடு விட்டுக் கூடு பாய்றதுன்னு சொல்வாங்க. சித்தர்களுக்கு இதெல்லாம் சர்வ சாதாரணம், ஆனா அவங்க இத உலக நன்மைக்குத் தவிர வேறெதுக்கும் உபயோகிக்க மாட்டாங்க. திருமூலர், அருணகிரிநாதர்னு நிறைய உதாரணங்கள் இருக்கு நம்ம நாட்டிலேயே” என்றார்.

“அப்போ, ஒருத்தர் கூடு விட்டுக் கூடு பாய்ந்து கொன்னுட்டு மீண்டும் கூடு விட்டுக் கூடு பாய்ந்து அவனோட உடம்புக்குள்ள போறான்னு சொல்றீங்களா?” என்றார் ராம்.

“ஆமா. இதச் செய்ய ஒரு பொணம் கண்டிப்பா வேணும். அதுவும் இறந்து ஓரிரு நாளுக்குள்ள உள்ள பொணமா வேணும்! அந்தப் பொணமும் ஒரு தடவை மூச்சைப் புடிச்சு மீண்டும் விடுற தூரத்துக்குள்ள இருக்கணும். கூடு விட்டுக் கூடு பாய்ஞ்சதும் முன்னே இருந்த உடல் பொணமா மாறிரும். பொணமா இருந்த உடல் உயிர் பெற்று விடும்.” என்றார்.

வாய் பிளந்து கேட்டுக் கொண்டிருந்தனர் அனைவரும் (கருப்பு உட்பட!). “இந்தக் காலத்திலும் இதெல்லாம் நடக்கும்னு நினைக்கிறீங்களா?” என்றார் ராம்.

“காலத்துக்கும் இதுக்கும் சம்பந்தமில்லை” என்றார் சாமியார். அப்படியானால் அவனைப் பிடிக்க வழியே இல்லையா? என்றார் சங்கர். “ஏன் இல்லை. அதுக்குத் தான் உங்களைப் படைச்சு அனுப்பியிருக்கானே!” என்றார் சாமியார்.

இந்தப் பதினெட்டுக் கொலைகளுக்கும் ஏதாவது ஒரு முடிச்சு கண்டிப்பா இருந்தே தீரும். அதக் கண்டுபுடிக்க வேண்டியது உங்க வேலை. அத்தனை கொலையுண்டவங்களுக்கும் தொடர்புடைய ஒருத்தன் கண்டிப்பா இருந்தே தீருவான். அவன் தான் கொலைகாரனா இருப்பான். அவனுக்கு இந்த வித்தை பொறப்பால கூட வந்திருக்கலாம். சித்தனா இருந்தா கண்டிப்பா ஒரு உயிரை அழிக்கிறதுக்கு உபயோகிக்கவே மாட்டான். அவனைக் கண்டுபுடிங்க. ஆனா, அவனை எப்படி மடக்குறதுன்னு உங்ககிட்ட மட்டும் ரகசியமாச் சொல்றேன் என்று

ராமைக் கூப்பிட்டார்.

இப்போது ராமுக்கு அவர் மேல் கொஞ்சம் நம்பிக்கையும் பக்தியும் வந்திருந்தது. அவரருகில் சென்றவர் அவர் மேல் கற்பூர வாசனை வீசுவதை உணர்ந்தார். மெய் சிலிர்த்தது அவருக்கு. அவர் காதுக்குள் சில செய்திகளைச் சொன்னார் சாமியார். மௌனமாகக் கேட்டுக் கொண்ட ராம் நன்றியுடன் தலையசைத்து வணங்கி கண்ணீர் துளிர்க்க ஆசிபெற்றார்.

சாமியார் எந்த உணர்ச்சியையும் காட்டவில்லை. நீங்க இப்போ கிளம்பினாத் தான் ராத்திரிக்குள்ள ஊரு போய்ச் சேர முடியும். கிளம்புங்க என்றார்.

அவர் என்ன சொன்னார் என்று சங்கரும் கேட்கவில்லை. ராமும் சொல்லவில்லை! மௌனமாக நடைபோட ஆரம்பித்திருந்தனர், சாமியாரிடம் விடைபெற்று!

# 21. பாகம்: 21

*Plato's Allegory of the Cave continues…*

*The prisoners engage in what appears to us to be a game - naming the shapes as they come by. This, however, is the only reality that they know, even though they are seeing merely shadows of images. They are thus conditioned to judge the quality of one another by their skill in quickly naming the shapes and dislike those who begin to play poorly.*

*Suppose a prisoner is released and compelled to stand up and turn around.*

*His eyes will be blinded by the firelight, and the shapes passing will appear less real than their shadows.*

*Similarly, if he is dragged up out of the cave into the sunlight, his eyes will be so blinded that he will not be able to see anything. At first, he will be able to see darker shapes such as shadows and, only later, brighter and brighter objects.*

*The last object he would be able to see is the sun, which, in time, he would learn to see as that object which provides the seasons and the courses of the year, presides over all things in the visible region, and is in some way the cause of all these things that he has seen.*

*(This part of the allegory, incidentally, closely matches Plato's metaphor of the sun which occurs near the end of The Republic, Book VI.)*

சங்கரும் ராமும் மீண்டும் சென்னை வந்து சேர்ந்தவுடன் "பூரணம்" என்ற பெயரில் இருந்த 45 பேரின் பட்டியல் அவர்கள் கைக்கு வந்து சேர்ந்தது. ராம் வரும் வழியிலேயே அக்காமடம் காவல் நிலையத்திற்குத் தகவல் அனுப்பி பரமசிவத்தின் தோட்டக்காரனை உடனடியாக அனுப்பி வைக்குமாறு சொல்லியிருந்தார்.

அவனும் காவலர் துணையுடன் அழைத்துவரப்பட்டதில் பயந்து போய்க் கிடந்தான். சங்கர் அவனிடம், "இங்கே பாரு, ஒன்னும் பயப்பட வேண்டியதில்ல. நான் உன்னைச் சந்தேகத்தின் பேரில் கூட்டி வரல. இந்த ஏரியாவுல பூரணம்

என்கின்ற பெயரில் இருப்பவர்கள் அவ்வளவு பேரயும் பார்த்து உங்க ஊருல நிலம் வைத்திருந்த பூரணம் யாருன்னு எங்களுக்குச் சரியாச் சொல்லணும். அதுக்குத் தான் கூட்டி வந்திருக்கோம். சரியா?'' என்றதும் தான் அவனுக்கு மூச்சே வந்தது.

ராம் ஒரு கான்ஸ்டபிளை அழைத்து, ''இவுங்க 45 பேர்கிட்டயும் இவனைக் கூட்டிக் காட்டிக்கிட்டு இருக்க முடியாது. அவங்க 45 பேரையும் இங்கே வரவழைக்கணும். ஒரு மணி நேரத்துல அவுங்க அத்தனை பேரும் இங்கே இருக்கணும்'' என்றார்.

கான்ஸ்டபிள் தலையைச் சொறிந்து கொண்டே, ''ஐயா இன்னைக்கு ஞாயிற்றுக் கிழமைங்க, அதான் கொஞ்சம் கஷ்டமுங்க'' என்றார்.

ராம், ''அதனாலத் தான் சொல்றேன் எல்லாரும் வூட்டுல தான் இருப்பாங்க. சீக்கிரம் கூட்டி வாங்க. கமான் இன்னும் ஒன் அவர்ல எல்லாரும் இங்க இருக்கணும்'' என்று உத்தரவிட்டார்.

வேலைகள் மளமளவென்று முடிந்தன.

மொத்தம் 36 பேர்களைத் திரட்டி விட்டிருந்தனர் காவலர்கள். ராமும், ''முதலில் இவர்களைப் பார்க்கட்டும், மீதி 9 பேரையும் நாளைக்குக் காலையில் அவங்க வீட்டுக்கே இவனைக் கூட்டிப் போகலாம்'' என்றார்.

வரிசையாய் நின்றிருந்த 36 பேரையும் கூர்ந்து கூர்ந்து பார்த்த தோட்டக்காரன், ''இவர்கள் யாருமே எங்கள் ஊர் பூரணம் இல்லை'' என்றான். ராம், ''இன்னும் 9 பேரு இருக்காங்க. அவங்க வெளியூர் போயிருக்காங்க. நாளைக்குக் காலையில அவங்களையும் பார்க்கணும். இப்போ போய் ரெஸ்ட் எடு. இவனுக்கு எதுவும் வேணும்னா வாங்கிக் கொடுங்கப்பா'' என்றார்.

சரியென்று, அவனை ஒரு ஓட்டலுக்கு அழைத்துச் சென்றார் ஒரு காவலர். சிறிது நேரம் ஆகியிருக்கும். திடீரென்று காவல் நிலையத்துக்குள் கூச்சல். தோட்டக்காரனை இறுகப் பிடித்த வண்ணம் இழுத்து வந்தார் அந்தக் காவலர்.

ராமைப் பார்த்து, ''சார்! ஓட்டல்ல சாப்பிடுற மாதிரி சாப்பிட்டுட்டு ஓடப் பார்த்தான் சார்! நல்ல வேளை ஓடிப் போயி இவனைப் புடிச்சிட்டேன். எங்கடா ஓடப்

பாக்குற. எங்கிட்டயே உன் வேலையைக் காட்டுறியா?” என்றார்.

ராம் தோட்டக்காரனைப் பார்த்த பார்வையில் நெருப்புத் தெறித்தது.

## 22. பாகம்: 22

*Once enlightened, so to speak, the freed prisoner would want to return to the cave to free "his fellow bondsmen". Another problem lies in the other prisoners not wanting to be freed: descending back into the cave would require that the freed prisoner's eyes adjust again, and for a time, he would be one of the ones identifying shapes on the wall. His eyes would be swamped by the darkness, and would take time to become acclimatized. Therefore, he would not be able to identify shapes on the wall as well as the other prisoners, making it seem as if his being taken to the surface completely ruined his eyesight. The other prisoners would then not go to the surface, in fear of losing their eyesight. If someone were to try and force a prisoner to come to the surface, the prisoner would become murderous, and kill whoever tried to force him to come to the surface. (The Republic bk. VII, 516b-c; trans. Paul Shorey).*

"உன்னை நம்பித்தான் 45 பேரைத் தேடிப்புடிச்சிக் கொண்டு வந்திருக்கேன் நான். நீ என்ன தான் நினைச்சிக்கிட்டிருக்க? எங்கிட்ட அடி வாங்கினாத்தான் நீ உண்மையச் சொல்லுவ போல இருக்கு" என்ற ராமைப் பார்த்து அரண்டு தான் போனான் தோட்டக் காரன்.

"அய்யா, ஓடிப்போறதா இருந்தா நான் அக்காமடத்துலயே ஓடிப்போயிருப்பேனுங்க. இங்க வந்து எதுக்குங்க ஓடணும்?" என்றான்.

"அப்புறம் எதுக்குடா ஓடின?" என்றார் இழுத்து வந்த காவலர்.

"ஐயா, நீங்க தேடிக்கிட்டிருக்குற எங்க ஊரு பூரணத்த நான் பார்த்தேனுங்க. அவனப் புடிச்சிடனும்னு தான் ஓட ஆரம்பிச்சேங்க. அதுக்குள்ள இந்த போலீஸ்காரரு என்ன இழுத்துப் புடிச்சி இங்க கூட்டி வந்துட்டாருங்க" என்றான்.

இப்போது ராமின் கோபம் அந்தக் காவலரின் மேல் திரும்பியது. "என்னய்யா இது! ச்சே! நல்ல வாய்ப்பைக் கோட்டை விட்டீங்களே" என்றவர், "அவன் எந்தப் பக்கமாப் போனான்? என்ன டிரஸ் உடுத்திருந்தான்? நடந்து போனானா? வண்டியில் போனானா? வண்டி என்றால் எந்த வண்டி? என்று எல்லா டீட்டெயில்ஸூம் எனக்குத் தெரிஞ்சாகணும். அப்போ அவன் இங்க தான் இருக்கான்கிற. நாளைக்கு அந்த 9 பேரையும் முதல்ல பாரு." என்றார்.

“சரிங்கய்யா” என்ற தோட்டக்காரன் போய் மூலையில் அமர்ந்து கொண்டான். எதற்கும் அவன் மேலும் ஒரு கண் இருக்கட்டும் என்றார் ராம்.

சங்கரும் ராமும் தோட்டக்காரன் சொன்ன விசயத்தைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தார்கள். “தோட்டக்காரன் சொல்றபடி பார்த்தா அந்த பூரணம் இங்கே தான் இருக்கான். டிப்டாப்பா இருந்ததா சொல்றான். பைக்ல தான் போனான் அப்படித்தானே? அவன் மீண்டும் இந்த வழியாத்தானே வரணும்? தோட்டக்காரனை அதையும் பாக்கச் சொல்லி இருக்கீங்களா?” என்றார் சங்கர்.

ஆமாம் என்று தலையசைப்பில் சொன்ன ராம், “கிட்டத் தட்ட அவனைப் புடிச்சிட்டோம்” என்றார். சங்கர், “கொலகாரனப் புடிச்சாலும், அதுக்கான மோட்டிவ்வையும் கண்டறியனும் சார். இந்தப் பூரணத்துக்கும் அந்தப் பதினெட்டுப் பேருக்கும் இருக்கும் தொடர்பை நிரூபிக்கணும். அந்த வழியிலயும் கொஞ்சம் தோண்டிப் பாக்கணும். முதல்ல இந்த பூரணத்தைப் புடிச்ச வுடனேயே நாம பாக்க வேண்டியது அது தான். அவனைப் பின் தொடர்கிறோம்னு அவனுக்குத் தெரியவே கூடாது. அதுக்கு நாம செய்ய வேண்டியது ரகசியம் காக்கணும். உங்க கான்ஸ்டபிள்ஸுக்குக் கூடத் தெரிய வேண்டாம். இனிமேல் அந்தத் தோட்டக்காரன என் கஸ்டடியில் எடுத்துக்கிறேன். பூரணத்தைக் கண்டறிந்ததும் மீண்டும் உங்க கிட்ட வர்றேன்” என்றார்.

அவர் சொல்வதும் சரியாகவே தோன்றியது ராமுக்கு. தோட்டக்காரனை அழைத்துக் கொண்டு வெளியே சென்றார் சங்கர்.

இருவரும் வெகு நேரமாய் ரோட்டில் நின்று ஏதோ பேசிக் கொண்டிருந்தனர். இரவு ஒன்பது மணியிருக்கும்.

திடீரென தோட்டக்காரன் சங்கரைப் பார்த்து குசுகுசுவென்னும் குரலில் சார் நாம தேடிக்கிட்டு இருக்குற பூரணம் அதோ வர்றான் பாருங்க சார் என்று கையைக் கூட உயர்த்தாமல் சங்கருக்கும் மட்டும் கேட்கும் படி சொன்னான்.

அவன் ஏற்கனவே சொன்ன அங்க அடையாளங்களை வைத்து பூரணத்தை முதன் முதலில் பார்த்தார் சங்கர்.

# 23. பாகம்: 23

*Interpretation*

*In the simplest sense, Plato is talking about waking up to the truth of reality about us. He is questioning the very nature of reality and playing the ultimate "what if" game. Not content with mere suggestion, Plato interprets the allegory (beginning at 517b): "This image then [the allegory of the cave] we must apply as a whole to all that has been said" —i.e., it can be used to interpret the preceding several pages, which concern the metaphor of the sun and the divided line. In particular, Plato likens "the region revealed through sight", i.e., the ordinary objects we see around us:to the habitation of the prison, and the light of the fire in it to the power of the sun. And if you assume the ascent and the contemplation of the things above is the soul's ascension to the intelligible region, you will not miss my surmise…[M]y dream as it appears to me is that in the region of the known the last thing to be seen and hardly seen is the idea of good, and that when seen it must needs point us to the conclusion that this is indeed the cause for all things of all that is right and beautiful, giving birth in the visible world to light, and the author of light and itself in the intelligible world being the authentic source of truth and reason…(517b-c)*

"அவன் தான்னு நல்லாத் தெரியுமா?" என்றார் சங்கர் உள்ளுக்குள் குதூகலத்துடன் எந்த உணர்ச்சியையும் வெளியே காட்டாமல்.

"நீங்க இவ்வளவு தூரம் கேட்கும் போது பொய் சொல்வேனா ஐயா? அது அவனே தான்" என்றான் தோட்டக்காரன்.

"சரி, இப்போ எனக்குக் கொஞ்சம் வேலையிருக்கு இனிமேல் நீ வீட்டுக்குப் போகலாம்" என்றவர், அவசரமாக காலூன்றியபடி தான் நின்றிருந்த புல்லட்டை பூரணத்தை நோக்கிச் செலுத்த ஆரம்பித்தார். மெதுவாகவே அவன் சென்று கொண்டிருந்தான். அவனை கொஞ்சம் கொஞ்சமாக அளக்க ஆரம்பித்த சங்கர், முதலில் அவன் வண்டி எண்ணைக் குறித்துக் கொண்டார் மனதினுள். ஒரு தெருவுக்குள் நுழைந்து ஒரு வீட்டின் முன்னால் நிறுத்தினான் அவன் தன் வண்டியை. அந்த வீட்டைத் தன் மனதிற்குள்ளேயே படமெடுத்துக் கொண்ட சங்கர், எந்த

அவசரமும் காட்டாமல் நிதானமாய் அவனைப் பற்றிப் பார்ப்பதே தெரியாவண்ணம், அவன் வீட்டைத்தாண்டி வண்டியைச் செலுத்தி விட்டு மீண்டும் ஒரு மணி நேரம் கழித்து அதே இடத்திற்கு ஒரு சைக்கிளில் சாதாரண உடையில் வந்தார்.

அப்போதும் அதே வண்டி அங்கேயே நின்று கொண்டிருந்தது. மனம் அவருக்கு மகிழ்ச்சியில் துள்ளியது. சரியாக அந்த வீட்டிற்கு எதிரே சைக்கிளை விட்டு இறங்கி நின்று வீட்டைச் சிறிது நோட்டமிட்டார். ஒரு சத்தமும் கேட்கவில்லை உள்ளே. ஒரே அமைதியாக இருந்தது. பத்து மணியானாலும் வெளிச்சம் தெரிந்தது. சிறிது நேரம் வீட்டையே பார்த்துக் கொண்டிருந்தவர், தீர்மானமாய் கிளம்பிச் சென்றார்.

வீட்டிற்குச் சென்றவர் அன்றிரவு முழுதும் தூங்கவில்லை. அந்தக் கேஸ் சம்பந்தப்பட்ட அனைத்து கோப்புக்களையும் அலசி ஆராய்ந்தார். வரிசையாகப் பதினெட்டுக் கோப்புக்களையும் திறந்து வைத்தவர், கடைசியில் ஒவ்வொன்றாக மூடி நான்கே கோப்புக்களை மட்டும் திறந்து வைத்திருந்தார். இதழ்களில் புன்முறுவல் அரும்பியிருந்தது.

இருக்காதா பின்னே? சிக்கலான ஒரு கேஸின் முதலும் கடைசியுமாய் இருக்கும் அந்த முடிச்சை அவிழ்க்கும் வழி தெரிந்து விட்டதே அவருக்கு!

காலையில் முதல் வேலையாய் ராமைப் போய்ப் பார்க்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டார். தூக்கம் கண்களைச் சொக்கியது. அதற்குள் விடிந்தும் விட்டிருந்தது.

அன்று இரவு தான் அவரால் மீண்டும் ராமைப் பார்க்க முடிந்தது.

## 24. பாகம்: 24

*Plato, in his dialogue The Republic Book 6 (509D–513E), has Socrates explain the literary device of a divided line to teach basic philosophical views about four levels of existence (especially "the intelligible" world of the forms, universals, and "the visible" world we see around us) and the corresponding ways we come to know what exists.*

ராமைச் சந்தித்ததும் சங்கர் தான் கண்டுபிடித்த அனைத்தையும் தெளிவாக விளக்கமாகச் சொன்னார்.

ராமும் அன்று ஒன்றும் சும்மா இருந்திருக்கவில்லை. ஸ்ரீதர் மற்றும் ஐசுவரியா பற்றி விசாரித்து வந்திருந்தார். ஐசுவரியாவின் தோழிகளிடமும் ஸ்ரீதரின் தோழர்களிடமும் விசாரித்ததில் இருவரும் நெருங்கிய நண்பர்கள் என்றும் அதே சமயத்தில் ஐசுவரியாவுக்கு ஒரு காதலன் இருந்திருக்கின்றான் என்பதையும் இருவரும் ஞாயிற்றுக்கிழமையானால் மாலையில் ஒரு குறிப்பிட்ட திரையரங்கிற்குச் சென்று வருவார்கள் என்றும் விசாரித்தறிந்திருந்தார். அவர் சொன்னதனைத்தையும் வியப்புடன் கேட்டுக் கொண்டிருந்த சங்கர், ஆக புதிரில் நான் விடுவிக்காத இடங்கள் அனைத்தையும் நீங்கள் விடுவித்து விட்டீர்கள். ரொம்ப நல்லதாப் போச்சு என்றார். அடுத்து நாம் செய்ய வேண்டியது? என்று கேட்ட சங்கரிடம் கமிசனரிடம் அப்பாயிண்ட்மெண்ட் வாங்கவேண்டியது தான் என்று சிரித்துக் கொண்டே கூறினார் ராம்.

கமிசனரிடம் தொலைபேசியில் சொன்னவுடன் மகிழ்ச்சியுடன் உடனேயே நேரம் ஒதுக்கினார் அவர். அந்த இரவில் கமிசனர் அலுவலகத்தில் கமிசனருடன் சங்கரும் ராமும் மட்டும் உடனிருந்தனர். ஆலோசனை ஆரம்பமானது.

ராம் தான் கமிசனரிடம் விளக்கினார்:

"இந்தக் கேஸ் ஒரு விசித்திரமான கேஸ் என்பதில் சந்தேகமில்லை சார். நாங்கள் முதலில் அக்காமடம் சென்று விசாரித்ததில் பூர்ணம் என்பவனுக்கும் பரமசிவத்திற்கும் ஏற்பட்ட விரோதத்தைப் பற்றி அறிந்து கொண்டோம். ஸ்ரீவில்லிபுத்தூர் சென்று சித்தர் ஒருவரைச் சந்தித்ததில் ஒரே மனிதனே நடைபெற்ற

சம்பவங்கள் அனைத்துக்கும் காரணமாக இருக்கக் கூடும் என்பதையும், சம்பவங்கள் நடந்த விதத்தை வைத்து அது கூடு விட்டுக் கூடு பாயும் வித்தை அறிந்த ஒரு மனிதனாக இருக்கலாம் என்றும் அறிந்து கொண்டோம்.

பரமசிவத்தின் தோட்டக்காரனை இங்கே அழைத்து வந்து பூரணம் என்ற பெயரில் இங்கே இருக்கும் நபர்கள் அனைவரையும் ஸ்டேஷனுக்கு வரச் சொல்லியும் அவர்கள் வீட்டிற்கே சென்றும் பார்த்ததில் யாருமே இல்லை என்று அவன் சொல்லிவிட்டான். இனி சங்கர் மீதியைச் சொல்வார்.''

சங்கர் தன் பங்குக்கு ஆரம்பித்தார்:

''தோட்டக்காரனுடன் பேசிக் கொண்டிருக்கையில் தான் தோட்டக்காரன் பூரணத்தை அடையாளம் காட்டினான். அவன் வீட்டினை நேற்றிரவு நோட்டமிட்டேன் நான். நேற்றிரவு அவன் வண்டி எண்ணை வைத்து அவனது விலாசத்தைச் சரிபார்த்ததில் அந்த விலாசம் தான் கொடுத்திருந்தான் என்பது தெரியவந்தது. ஆனால் அவன் பெயர் பூரணம் இல்லை. அவன் பெயர் சந்திரன் என்று இருந்தது. இன்று காலை அதைத் தோட்டக்காரனிடம் கேட்டதற்கு அவன் முழுப்பெயர் பூரணச்சந்திரன் என்றும் கிராமத்தில் அவனைப் பூரணம் என்று மட்டுமே அழைப்பார்கள் என்றும் சொன்னான். இங்கே அவனை அனைவருக்கும் சந்திரன் என்றால் மட்டுமே தெரியும்.

சந்திரன் தான் கொலை செய்தான் என்றால் அதற்கான நோக்கம் இருக்க வேண்டும் அல்லவா? எனவே அந்தப் பதினெட்டுக் கேஸ் பைல்களையும் நேற்றிரவு முழுதும் ஆராய்ந்தேன். ஏதேனும் ஒரு வகையில் அவர்கள் சந்திரனுடன் சம்பந்தப்பட்டு இருந்தார்கள் என்பது தெரியவந்தது. உதாரணமாக, முதலில் இறந்த அந்த வடநாட்டுக்காரர் ஒரு பைனான்சியர். அவர் சந்திரனுக்கு தொழில் செய்வதற்காக நிறைய கடன் கொடுத்திருக்கிறார். அவனுக்குத் தொழிலில் நஷ்டம் என்று வந்த போது கடனை மிரட்டி வாங்கியிருக்கிறார். பலமுறை அவன் கடைக்கே வந்து அவனை அவமானப்படுத்தியிருக்கிறார்.

கிராமத்திலிருந்த பரமசிவம் அவனது நிலத்தை அவன் சொன்ன விலைக்கு வாங்க மறுத்ததுடன் தகராறும் செய்திருக்கிறார்.

*மேலும் இறந்த இன்னொருவர் சந்திரனின் கடையில் வாங்கிய ஒரு மின்விசிறி சரியாக இயங்கவில்லை என்று நுகர்வோர் கோர்ட் வரை அவனை இழுத்திருக்கிறார்.*

*இப்படி இறந்த ஒவ்வொருவரும் சந்திரனுக்கு மட்டுமே ஏதேனும் ஒரு வகையில் எதிரியாக இருந்திருந்தனர். ஆனால், இந்த ஸ்ரீதர் மற்றும் ஐசுவரியா மட்டுமே எனக்குப் புதிராக இருந்தனர். அதையும் ராம் இன்று தீர்த்து வைத்து விட்டார். சந்திரனும் ஐசுவரியாவும் காதலர்கள். எங்கே தன் காதலியுடன் நெருங்கிப் பழகும் ஸ்ரீதர் தன் காதலுக்கு எதிரியாக வந்து விடுவானோ என்று ஸ்ரீதரையும், ஒரு கட்டத்தில் தன் காதலியான ஐசுவரியாவையும் சந்தேகித்து சந்திரன் கொன்றிருக்கக் கூடும். அதன் பின் எந்தச் சம்பவமும் நடைபெறவில்லை என்பதையும் கவனத்தில் கொள்ளவேண்டும்.*

*சந்திரனும் ஐசுவரியாவும் பிரதி வாரமும் ஞாயிற்றுக் கிழமையன்று ஒரே திரையரங்கத்தில் சென்று படம் பார்க்கும் பழக்கத்தை வைத்திருந்தனர். அந்தப் பழக்கத்தை சந்திரனால் ஐசுவரியா இறந்த பின்னும் கூட விட முடியவில்லை. நேற்று ஞாயிற்றுக்கிழமை. அவன் கிளம்பிச் செல்லும் போது தான் தோட்டக்காரன் பார்த்திருக்கவேண்டும். மீண்டும் திரும்பி வருகையில் தோட்டக்காரன் சரியாக அடையாளம் காட்டிவிட்டான். இதுவே அவன் கொஞ்சம் அப்நார்மல் என்பதை நிரூபிக்கப் போதுமானதாக இருக்கும் என்று நினைக்கிறேன்.''*

*அவர்கள் இருவர் பேசியதையும் கவனமாகக் காது கொடுத்துக் கேட்ட கமிசனர், ''நல்ல கிரவுண்ட் ஒர்க் பண்ணியிருக்கீங்க. கங்கிராஜுலேசன்ஸ். ஆனால் இந்தக் கேஸ் பைலை எப்படி முடிக்கிறது? அவனை நாளைக்கே காலையில் முதல் வேலையாய் கைது செய்து விடலாமா? நம்மால் கோர்ட்டில் அனைத்தையும் காட்டி நிரூபிக்க முடியுமா?'' என்றார்.*

*ராம், சங்கர் இருவர் தலைகளும் இடம் வலமாக வேகமாக அசைந்தன.*

# 25. பாகம்: 25

*Socrates asks us to imagine a line divided into two parts. The larger part (segment CE) represents the intelligible world and the smaller (segment AC), the visible world. Then, he says, imagine each part of the line further divided. As it turns out, the divisions in the segment for the intelligible world represent higher (DE) and lower (CD) forms, respectively. Moreover, the divisions in the segment for the visible world represent ordinary visible objects (BC), on the one hand, and their shadows, reflections, and other representations (AB), on the other.*

*It is important to note that the line segments are said to be unequal: the proportions of their lengths is said to represent "their comparative clearness and obscurity" and their comparative "reality and truth," as well as whether we have knowledge or instead mere opinion of the objects. It can be shown with simple mathematics that any line divided in the way Socrates describes that the two middle sections, BC and CD, are necessarily the same length. Hence, we are said to have relatively clear knowledge of something that is more real and "true" when we attend to ordinary perceptual objects like rocks and trees; by comparison, if we merely attend to their shadows and reflections, we have relatively obscure opinion of something not quite real.*

*Socrates uses this familiar relationship, between ordinary objects and their representations or images, in order to illustrate the relationship between the visual world as a whole (visual objects and their images) and the world of forms as a whole. The former is made up of a series of passing, particular reflections of the latter, which is eternal, more real and "true." Moreover, the knowledge that we have of the forms–when indeed we do have it–is of a higher order than knowledge of the mere particulars in the perceptual world.*

*Consider next the difference between the two parts of the intelligible world, represented by segments CD and DE. Plato's discussion of this is apt to seem obscure. The basic idea is that the lower forms (represented by CD) are the real items of which the ordinary particular objects around us are merely reflections or images. The higher forms, by contrast–of which the so-called Form of the Good is the "highest"–are known only by what has come to be called a priori reasoning, so that strictly speaking, knowledge of them does not depend upon experience of particulars or even on ideas*

*(forms) of perceptually-known particulars.*

சந்திரன் அன்று இரவில் தூக்கம் வராமல் விழித்துக் கொண்டிருந்தான். அவன் வாழ்வில் நடந்த நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றையும் மெதுவாக அசைபோட்டுக் கொண்டிருந்தான்.

சேட் இறந்த போது மிகவும் சந்தோசமடைந்தான் சந்திரன். மட்டமாக அவனை அவமானப்படுத்திய அந்த சேட் கொடூரமான முறையில் இறக்க வேண்டும் என்ற ஆசை நிறைவேறியதில் மிகுந்த மகிழ்ச்சி அவனுக்கு. அதுவும் யாரோ செத்த கிழவி தான் அவனைக் கொன்றது என்று அறிந்ததும் இரட்டிப்பு சந்தோசம் இருந்தது அவனுக்கு,

அவனது தந்தை வாங்கியிருந்த கிராமத்து நிலத்தை விற்கச் சென்ற போது தகராறு செய்த பரமசிவமும் இறந்த போது தான், தான் நினைப்பது அப்படியே நடக்கிறதே என்ற ஆச்சரியம் அவனைச் சூழ்ந்தது. பரமசிவம் எந்த முறையில் சாகவேண்டும் என்று நினைத்திருந்தானோ அதே முறையில் இறந்த போது தான் கொஞ்சம் வித்தியாசமாக உணர்ந்தான்.

அவ்விரண்டும் அவனைப் பொருத்தவரை சம்பவங்கள் தான். ஆனால் அதற்குப் பின் நடந்த 16 சாவுகள்? அனைத்தும் சந்திரனால் மிக நேர்த்தியாகத் திட்டமிடப் பட்டு செய்யப்பட்ட கொலைகள். பரமசிவம் இறந்தவுடன் தன் உயிரால் தன் உடலை விட்டு வெளியே வரச் செய்ய முடிகிறது என்பதை தன் உடலையே தன்னால் வெளியிலிருந்து காண முடிந்ததன் மூலம் அறிந்து கொண்டான். மேலும் இறந்து கிடந்த ஒரு எறும்பிற்குள் தன் உயிரைச் செலுத்தி தன்னால் ஒரு எறும்பாகக் கூட மாற முடிவதையும் அறிந்து கொண்டான். மீண்டும் நினைக்கும் நேரத்தில் தன் சொந்த உடலுக்குள் வர முடிவதையும் அறிந்து தனக்குக் கிடைத்த வரப்பிரசாதமாகவே கருதினான். தன் எதிரிகள் ஒவ்வொருவரையும் நினைத்தபடி பழி தீர்த்துக் கொண்டான். ஆனால், ஐசுவரியாவை மட்டும் கொஞ்சம் கவலையுடனேயே கொன்றான். ஸ்ரீதரைக் கொன்றவுடன் ஐசுவரியாவை மட்டும் உயிரோடு விட்டு விடலாம் என்று தான் எண்ணியிருந்தான். ஆனால் அன்று ஸ்ரீதரையும் தியேட்டருக்கு ஐசுவரியா அழைத்து வந்திருந்ததை அவனால் ஜீரணிக்கவே முடியவில்லை. அவளைக் காணும் போதெல்லாம் ஸ்ரீதரும் அவளும் சிரித்துப் பேசிக் கொண்டிருந்த

காட்சியே அவன் கண்களுக்குத் தெரிந்தது. எனவே அவளையும் கொன்று விட்டான்.

ஐசுவரியாவையும் கொன்றவுடன் அவன் வாழ்வே சூனியமாகி விட்டது. அவனது அம்மாவும் உனக்கு நல்ல பெண்ணாய்ப் பார்த்து கல்யாணம் செய்து வைக்கிறேன் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார். இருந்தாலும் ஐசுவரியாவின் இடத்தில் இன்னொருத்தியை அவனால் நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை.

தன் வாழ்வின் போக்கு எப்படிச் செல்லப் போகிறது என்று நினைத்து அவனது தூக்கம் கெட்டிருந்தது.

# 26. பாகம்: 26

*http://www.muthamilmantram.com/showthread.php?t=12231*

*“ஏன் முடியாது என்று நினைக்கிறீர்கள்?” என்றார் கமிசனர் சந்தேகத்துடன்.*

*“சார், முதல்ல இந்தக் கூடு விட்டுக் கூடு பாயும் வித்தை இவனுக்கு இருக்கிறது என்பதை எப்படி நிரூபிப்பது? அமெரிக்காவில் நடைபெற்ற ஒரு கருத்துக் கணிப்பு பத்து பேருக்கு ஒருவர் தன் உடலை விட்டு உயிரை வெளியே கொண்டு வரும் சாத்தியமிருக்கிறது என்று சொல்கிறது. நாம் இந்த ஆதாரத்தைக் கோர்ட்டில் சொன்னால், அவன் அதையே பிடித்துக் கொண்டு, பத்து பேருக்கு ஒருவர் என்றால், என்னைப் போல் வேறொருவரும் இருக்க வாய்ப்பிருக்கிறதே என்று சொல்லக் கூடும்!*

*இணையத்தில் உள்ள நிறைய தகவல்களை இதற்காக நான் அலசி ஆராய்ந்திருக்கின்றேன். தமிழில் கூட முத்தமிழ்மன்றம் என்று ஒரு மன்றம் இருக்கிறது. அதில் தமிழில் அருமையாக விளக்கியிருக்கிறார்கள் என்னார் என்பவரும் ராகவன் என்பவரும். மெஞ்ஞானம், விஞ்ஞானம் இரண்டுமே இந்தக் கூடு விட்டுக் கூடு பாய்தலை ஒத்துக் கொள்கிறது! இருந்தாலும், சந்திரனுக்கு இது இருக்கிறது என்பதை ஒரு கோர்ட்டில் எவ்வாறு நிரூபிக்க முடியும்? ஒரு பிணத்தை அருகில் வைத்துக் கொண்டா? எனவே தான் இந்தக் கேஸை நம்மால் சட்ட பூர்வமாக நிரூபிக்க இயலாது என்கிறோம்” என்றார் ராம்.*

*உடனே கமிசனர் அவசரமாக, “அப்படியே நம்மால் நிரூபிக்க முடிந்தாலும் அவனுக்குக் கிடைக்கப் போவது மரண தண்டனை தானே? எனவே நாமே அவனுக்கு மரண தண்டனை வழங்க வேண்டியது தான். என்கவுண்டர் செய்து விட வேண்டியது தான். சட்டப்படி நடத்த முடியாததை இப்படித் தான் நிறைவேத்திக்கணும்” என்றார்.*

*“இதைத் தான் நாங்களும் எதிர்பார்த்தோம் சார். உங்கள் ஆர்டருக்காகத் தான் வெயிட் பண்றோம் என்றார் ராம்.”சரி. நாளைக்குக் காலைக்குள்ள சி.எம்.மிடம் பேசி உங்களுக்கு ஆர்டர் கிடைக்க ஏற்பாடு செய்றேன்” என்றார்.*

*மறுநாள் காலை. சங்கரும் ராமும் மிகுந்த ஆர்வத்துடன் காத்துக் கொண்டிருந்தனர். கமிசனரின் அழைப்பும் வந்தது. "சி.எம்மிடம் பேசி விட்டேன். அது அவன் தான் செய்தது என்பது உண்மையாக இருந்தால் என்கவுண்டர் செய்து விடலாம் என்று சொல்லியிருக்கிறார். அவனுக்கு இந்த வித்தை தெரியும் என்பதை எனக்கு மட்டுமாவது நீங்கள் நிரூபிக்க வேண்டும். உங்களால் அப்படிச் செய்ய முடிந்தால் உங்களுக்கு அவனைக் கொல்லும் அதிகாரத்தைத் தருகிறேன்" என்றார் கமிசனர்.*

*சங்கர் ராமைச் சற்றுக் கவலையுடன் பார்த்தார்,*

*ராம் உற்சாகத்துடன், "எங்களால் இதை உங்களுக்கு நிரூபித்துக் காட்ட முடியும் சார். அவனை எப்படி மடக்குவது என்ற ரகசியத்தை எனக்குச் சொல்லியிருக்கிறார் அந்தச் சித்தர். அவனை மடக்குதுடன், உங்களுக்கும் நிரூபித்து அவனுக்குத் தகுந்த தண்டனையையும் இன்றே வழங்கி விடுவோம்" என்றார்.*

*பின்னர் அவர் சொன்ன படியே பல முன்னேற்பாடுகள் செய்யப்பட்டன. அவரது காவல் நிலையத்திலேயே கமிசனர் அவரது இருக்கையில் அமர்ந்திருந்தார்.*

*காலை 11 மணியளவில் சந்திரனை விசாரிக்க வேண்டும் என்று அழைத்த போதே சிறிது சந்தேகம் அவனுக்குள் எழுந்தது.*

*கமிசனர் இன்னொரு மேசையில் அமர்ந்திருக்க, ராமை ஒரு நாற்காலியில் அமரச் சொல்லி விட்டு அவனுக்கு எதிரே அமர்ந்தார் ராம். சங்கர் கமிசனர் அருகில் நின்று கொண்டிருந்தார்.*

*"என்ன விசயமா சார் என்னைக் கூப்பிட்டீங்க?" என்றான் சந்திரன்.*

*"சும்மா நடிக்காத சந்திரன். பூரணச்சந்திரன். எங்களுக்கு அவ்வளவும் தெரிஞ்சு போச்சு. உன்னால இனிமேலும் தப்பிக்க முடியாது. அந்த 18 கொலைகளையும் நீ தான் செஞ்சேங்கிற உண்மைய ஒழுங்கா ஒத்துக்கோ. ஒப்புதல் வாக்குமூலம் எழுதிக் கொடு. இல்லாட்டி என் வழியில நான் உன்னை விசாரிக்க வேண்டி வரும்." என்றார் ராம்.*

*"சார். நீங்க என்ன சொல்றீங்கன்னே எனக்குப் புரியல. 18 கொலைகள் நான்*

செஞ்சேனா? என்ன சார் ஆதாரம்?'' என்றான் சந்திரன்.

''பாத்தியா? இப்பக் கூட நான் செய்யலன்னு சொல்லமாட்டேங்குற. ஆதாரம் இருக்கான்னு தான் கேக்குற. இதுவே போதும். இதுக்கும் மேல ஆதாரம் வேணுமா உனக்கு ஆதாரம்?'' என்றார் ராம்.

''சார் நீங்க ஏதேதோ சொல்றீங்க. என் மேல வீணாப் பழி போட்றீங்கன்னு மட்டும் தெரியுது. ஏதோ கேஸை முடிக்க நான் தானா சார் உங்களுக்குக் கிடைச்சேன். நான் இன்னொசண்ட் சார். அந்தப் பதினெட்டுப் பேரும் யாருன்னு கூட எனக்குத் தெரியாது.'' - சந்திரன்.

''அந்தப் பதினெட்டுப் பேருக்கும் உனக்கும் என்ன தொடர்பு இருந்தது. அவுங்க சாகுற அளவுக்கு உனக்கும் அவங்களுக்கும் ஏற்பட்ட பிரச்னைகள் என்னாங்குறதுக்கு பைல் பைலா வைச்சிருக்கோம். இனி உன்னை லாக்கப்புல கூட்டிப் போயி வழக்கமா விசாரிக்கிற மாதிரி விசாரிச்சாத் தான் சரிப்படுவ போல இருக்கு'' - ராம்.

''லாக்கப்பா? எதுக்கு சார்? என் மேல எப்.ஐ.ஆர். போட்டிருக்கீங்களா? எதுவானாலும் என் மேல கேஸ் போடுங்க. என் வக்கீல் வந்து உங்களுக்குத் தகுந்த பதில் குடுப்பார்'' என்றான் சந்திரன்.

''எப்.ஐ.ஆரா? அதுக்கு வேற எதுக்குடா பேப்பர வேஸ்ட் பண்ணனும்? ஏற்கனவே நாங்க உன்னைப் பத்தி சேத்து வச்சிருக்குற பேப்பர்ஸ் போதாதா? ஒனக்கு எல்லாம் என்கவுண்டர் தாண்டா லாயக்கு. கமிசனர் சார் இவனைத் தூக்குறதுக்கு எனக்கு ஆர்டர் குடுங்க சார். இப்போக் குடுங்க சார். மவனே உனக்குச் சாவு என் கையால தாண்டா'' என்றார் ராம் கோபத்துடன்.

''என்ன சார் மரியாதை இல்லாமப் பேசுறீங்க? எதுவானாலும் கோர்ட்டுக்குப் போய் சட்டப்படி செய்யுங்க சார். இல்லாட்டி உங்க எதிர்காலம் தான் பாதிக்கும்'' என்றான் சந்திரன்.

''ஒனக்கெல்லாம் எதுக்குடா மரியாதை? கமிசனர் சார் என்ன சொல்றது? என் வேலையே போனாலும் பரவாயில்ல. உன்னைக் கொல்லாம விடமாட்டேன்'' என்று ஆத்திரத்துடன் எழுந்த ராம் கையில் துப்பாக்கியுடன் அவனைப் பார்த்துச் சுட்டார்.

அவர் சுடுவதற்கு ஒரு விநாடி முன்பே அவனது உடலிலிருந்து அவனது உயிர் வெளிப்பட்டுச் சென்றிருந்தது. அவன் உடலில் எந்தக் குண்டும் துளைக்காமலேயே பிணமான அதிசயத்தை கமிசனர், சங்கர், ராம் ஆகிய மூவரும் கண்டனர்.

ஆம். சந்திரன் அவர்கள் வலையில் சிக்கி விட்டானா? அல்லது அவனைத் தப்பிக்க விட்டாரா ராம்?

# 27. பாகம்: 26

*http://www.muthamilmantram.com/showthread.php?t=11157*

*கமிசனர், "நீங்கள் சொன்னதை ஒத்துக் கொள்கிறேன். இப்போது அவனது உயிர் எங்கே இருக்கிறது?" என்றார்.*

*ராம் சிரித்துக் கொண்டே, "சார், என் துப்பாக்கியில் இருப்பது நிஜத் தோட்டாக்களே இல்லை. இதெல்லாம் திட்டமிடப் பட்டு செய்த ஒரு டிராமா. அவன் அமர்ந்திருந்த நாற்காலிக்கு அருகிலேயே ஒரு செத்த ஈயைப் போட்டு வைக்கச் சொல்லியிருந்தேன் அவன் கண்ணில் படும் படி. அவனைக் கொன்று விடுவேன் என்று பயமுறுத்தினால் எப்படியும் தன் உயிரை அந்த ஈயிடம் செலுத்தி விடுவான் என்று எனக்கு முன்கூட்டியே தெரியும். எனவே தான் அவனைப் பயமுறுத்துவதற்காக பொய்த் தோட்டா செலுத்தப்பட்ட இந்தத் துப்பாக்கியால் அவனைச் சுட்டேன். அவனும் நான் நினைத்தபடியே ஈயிடம் தன் உயிரைச் செலுத்தி விட்டான்" என்றார்.*

*"அப்படியா? சரி இப்போது அந்த ஈ எங்கே?" என்றார் சற்று பயத்துடன் கமிசனர்.*

*"அது அப்போதே பறந்து விட்டது சார்" என்றார் ராம்.*

*"ஐயோ! அவனைத் தப்பிக்க வைத்து விட்டீர்கள் போல இருக்கிறதே?" என்றார் கமிசனர்.*

*"பொறுங்கள் சார். இனி அவனை என்கவுண்டரில் போட்டுத் தள்ள ஆர்டர் தருவீர்கள் தானே?" என்றார் ராம். "நிச்சயம். இதோ ஆர்டர்" என்றார் ஒரு காகிதத்தை நீட்டி.*

*அதைக் கையில் வாங்கிய ராம், சங்கரைப் பார்த்தார் அர்த்தபுஷ்டியுடன். அவரும் வெளியில் நின்றிருந்த கான்ஸ்டபிள் இருவரை அழைத்து சந்திரனின் உடலை எடுத்துக் கொண்டு செல்லும் படி உத்தரவிட்டார்.*

அரைமணி நேரம் ஆகியிருக்கும். ராமுக்கு செல்போனில் அழைப்பு வந்தது. ஹூம் என்று மட்டும் பதிலளித்த ராம், “சார். உங்கள் ஆர்டர் நிறைவேற்றப்பட்டு விட்டது. அவன் இனி தப்பிக்க முடியாது.” என்றார்.

கமிசனர் ஆச்சரியத்துடன், “என்ன நடந்தது? என்ன சொல்கிறீர்கள்?” என்றார்.

ராம் விளக்க ஆரம்பித்தார்: “சார், எனக்கு சித்தர் சொல்லிக் கொடுத்ததை அப்படியே செய்திருக்கிறேன். நானும் பல நூல்கள், இணைய தளங்கள் என்று ஆராய்ந்ததில் இந்த வித்தை பற்றி அறிந்தவனாகிவிட்டேன். திருமூலருக்கும் அருணகிரிநாதருக்கும் இதே தான் நிகழ்ந்திருக்கிறது. அப்புறம் தான் அந்தச் சித்தர் சொன்னவற்றைக் கருத்தில் கொண்டேன். வியந்து போனேன். ஒரு இடையன் இறந்ததால் அவனுக்குள் தன் உயிரைச் செலுத்தினார் மூலர். பசுக்களைத் தேற்றி விட்டு மீண்டும் வந்து பார்த்தால் அவர் உடல் அங்கே இல்லை. அதனால் தன் வாழ்நாள் முழுதும் அந்த இடையன் உடலிலேயே வாழ்ந்தார். அருணகிரிநாதர் கிளி வடிவம் எடுத்ததும் அவரது உடலை எரித்து விட்டான் சம்பந்தாண்டான். அதனால் தன் வாழ்நாள் முழுதும் கிளிரூபமாகவே இருந்தார் என்பது அவரது வரலாறு. இதிலிருக்கும் லாஜிக் தான் அந்தச் சித்தர் எனக்குக் காதில் சொன்னார்.

ஆம். கூடு விட்டுக் கூடு பாய்பவர்கள் மீண்டும் அடுத்த உடலில் பிரவேசிக்கும் முன் தன் சொந்த உடலுக்கு வந்திருக்க வேண்டும் என்பது தான் அந்த சிம்பிள் லாஜிக். இந்த லாஜிக் இல்லாவிட்டால் ஒவ்வொரு உடலாக மாறி மாறி ஆண்டவனுக்கே தண்ணி காட்ட ஆரம்பித்து விடுவார்கள் மனிதர்கள் தங்களுக்கு இந்தச் சித்தி கிடைத்தவுடன் என்பது இறைவன் சித்தமாக இருக்கலாம். இதனால், ஒன்று மீண்டும் அவர்கள் சொந்த உடலுக்கே வந்து விட வேண்டும். இதனால் அந்த உடலும் மூப்படையும். அல்லது அவர்கள் சென்ற உடலிலேயே காலந்தள்ள வேண்டும். அப்போதும் மரணம் நிச்சயம். எனவே கூடு விட்டுக் கூடு பாய எப்படியும் தன் சொந்த உடல் வேண்டும் என்பது விதி. அதை வைத்தே இப்போது உங்கள் ஆர்டரை நிறைவேற்றியுள்ளேன். சந்திரனின் உடலை மின்சார மயானத்தில் வைத்து எரித்து விட்டோம் என்ற செய்தி தான் எனக்கு அந்த செல்போன் காலில் கிடைத்த தகவல். இனி சந்திரன் தன் வாழ்நாள் முழுதும் ஈயாகவே கழிக்க வேண்டியது தான். அவனுக்கு இதை விட பெரிய தண்டனை தரமுடியாது தானே?” என்றார்.

"கை கொடுங்கள் ராம். கச்சிதமாக இந்தக் கேசை முடித்து விட்டீர்கள்" என்றார் கமிசனர். "இல்லை சார். நாம் நன்றி சொல்ல வேண்டியது ஐசுவரியாவுக்குத் தான். ஆம். அவளை மட்டும் சந்திரன் கொல்லாமல் இருந்திருந்தால் அவனுக்கும் ஸ்ரீதருக்கும் இருக்கும் பகையை நம்மால் நிரூபித்திருக்க முடியாது. தன் காதலியைக் கொன்றதால் தான் சந்திரன் மாட்டிக் கொண்டான்" என்றார்.

ஈ வடிவில் பறந்து வெளியே சென்ற சந்திரனும் இதைக் கண்ணீருடன் கேட்டுக் கொண்டிருந்தான்!

தன் தவறை உணர்ந்திருந்தான். தனக்குக் கிடைத்த தண்டனை நியாயமானது தான் என்றும் இயற்கையை வெல்ல யாராலும் முடியாது என்றும் அறிந்து கொண்டான்.

அவனுக்கு அவனது அம்மாவைப் பார்க்க வேண்டும் போல் இருந்தது. வீட்டிற்குப் பறந்து சென்றான். அம்மாவின் மேல் பறந்து சென்று அமர்ந்தான் சந்திரன். பாவம் அவனைக் கண்டு கொள்ளாமல் விரட்டினார் அவனது அம்மா.

சுயநலத்துக்காகப் பயன்படுத்தப்படும் எந்த ஒரு அசாதாரணமும் இப்படித் தான் முடியும் என்பதற்குச் சாட்சியாக நின்றிருந்தான் சந்திரன்.

அங்கே ராம் கமிசனரிடம், "சார் ஒரு பத்து நாள் லீவு வேணும் சார். ரொம்பத் தான் அலுப்பா இருக்கு" என்றார். "தாராளமா! பேமிலியோட எஞ்சாய் பண்ணுங்க" என்றார் கமிசனர். "ஏன் சார். ஸ்ரீவில்லிபுத்தூருக்கு என்னையும் அழைச்சிட்டுப் போகக் கூடாதா?" என்றார் சங்கர். ராம் கமிசனரிடம், "சங்கரின் சாதுரியமும், புத்திசாலித்தனமும் இந்தக் கேசுக்கு ரொம்ப உதவியாய் இருந்தது சார். இப்போக் கூட நான் சித்தரைப் பார்த்து நன்றி சொல்லி ஆசி வாங்கப் போறேன்னு எப்படி சரியாக் கண்டு பிடிச்சாரு பாருங்க சார். அவருக்கும் சேர்த்து லீவு குடுங்க." என்றார்.

கமிசனர் சிரித்துக் கொண்டே, "அப்படியே புரொமோசனுக்கும் ஏற்பாடு செய்திடுவோம்" என்றார்.

முற்றும்.